KALKI 11.10.92 ரூ. 3.00

# கல்கி



## துவண்ட கால்கள் துவளாத உள்ளம்!




## "என் கேசத்தை உண்மையிலே மிருதுவாக்க நான் உபயோகிப்பது மிகவும் மென்மையான ஒன்றையே"

உல்த்ரா டு கண்டீஷனிங் ஷேம்ப்பூ, தாவரங்களின் இயற்கை சாற்றிலே தயாரிக்கப்பட்டது.

லெபொரட்டாயர்ல் கார்னியர் பாரிஸ், பிரஞ்சு நாட்டின் நம்பர் 1 கேசப்பராமரிப்பு கம்பெனியாக விளங்கும் நிறுவனத்தினால் படைக்கப்பட்டு உத்திரவாதம் பெற்ற உல்த்ரா டு-வின் மென்மையான ஃபார்முலாவில் கீழ் குறிப்பிட்டவை அடங்கியுள்ளன.



**வறண்ட கூந்தலுக்கு வீட்ஜேர்ம் எண்ணெய்**

வைட்டமின்கள் பி & ஈ செறிந்த இது உலர்ந்த கேசத்தை மிருதுவாக்கி, பளபளக்கச் செய்து நன்கு படியும் தன்மையை அளிக்கிறது.



**சாதாரண கூந்தலுக்கு லைம் ப்ளாஸம்**

மருத்துவ மற்றும் அழகு சாதனங்கள் தயாரிப்பில் உபயோகமாகும் லைம் ப்ளாஸம் மிருதுவாக்கும் ஆக்கக் கூறுகளுக்குப் புகழ் பெற்றது.



**எண்ணெய் பசையுள்ள கூந்தலுக்கு சேஜ் சாறு**

கட்டுப்படுத்தும் ஆக்கக்கூறுகளின் வளத்தினைக் கொண்ட இது எண்ணெய் பசையுள்ள கூந்தலைத் திறம்பட சுத்தம் செய்து, இலேசாக்கி, முழுமையை அளிக்கிறது.




# Ultra DOUX

LABORATOIRES GARNIER

கேசப்பராமரிப்பில் பிரெஞ்சு நாட்டின் நம் 1

பெங்களூர் ரிப்போர்ட்

# பொன் முட்டையிடும் பங்காரப்பா!



* பங்காரப்பா :
பொன் முட்டைகள்...

●● பெங்களூர்க்காரர்கள் காலையில் கண்விழித்ததும் பத்திரிகையில் அந்தச் செய்தி வந்திருக்கிறதா என்று ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள். ஆனால் தினந்தோறும் ஏமாற்றம்தான். அவர்கள் எதிர்பார்க்கும் செய்தி : 'பங்காரப்பா ராஜினாமா'. யார் என்ன முயன்றும் இது நடக்கிற காரியமாகத் தெரியவில்லை.

''இந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு கட்டியாக வேண்டும். எதிர்ப்பாளர் கோஷ்டி, ஆதரவாளர் கோஷ்டி என்று எல்லோரும் தினமும் கூட்டம் சேர்ப்பதும் டெல்லிக்குப் போய் வருவதும் மக்கள் மத்தியில் அதிருப்தியை ஏற்படுத்தியிருக்கிறது என்பது மட்டுமல்ல, நிர்வாகமே ஸ்தம்பித்துப் போயிருக்கிறது. கோப்புகள் நகர்வதில்லை. மக்களுக்கு வேண்டிய எந்தக் காரியமும் நடக்கவில்லை'' - இப்படிச் சொல்லியிருப்பது கர்நாடகத்தின் எதிர்க்கட்சித் தலைவர் அல்ல. சாட்சாத் பங்காரப்பாவேதான்!

உடனே ஒரு நிருபர் கேட்டார். ''அப்படியானால் நீங்கள் ராஜினாமா செய்து பிரச்னையை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவீர்களா?'

பங்காரப்பாவின் பதில் : ''நான் ஏன் ராஜினாமா செய்ய வேண்டும்?''

முன்னாள் முதல்வர் வீரேந்திர பாட்டீலோ, ''நானும் இத்தனை ஆண்டுக் காலமாக அரசியலில் இருக்கிறேன். இது என்ன மாதிரி அரசியல் என்று எனக்கு ஒன்றுமே புரியவில்லை. முதல்வரை மாற்ற வேண்டும் என்பதற்கான எல்லாவிதமான முயற்சிகளும் நடவடிக்கைகளும் எடுத்தாகி விட்டது. ஆனாலும் பங்காரப்பாவை நரசிம்மராவ் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார். இதன் மர்மம் எனக்கு விளங்க வில்லை'' - என்று நிருபர்களைக் கூட்டி பேட்டி கொடுத்தார்.

கர்நாடக மாநில பி.ஜே.பி. தலைவர் எடியூரப்பாவோ ஒரு பேட்டியில் பகிரங்கமாக நரசிம்மராவ் மீது ஊழல் குற்றச்சாட்டு சுமத்தினார் : ''பங்காரப்பா பொன் முட்டையிடும் வாத்து. இந்த தங்க வாத்தைப் பலி கொடுக்க நரசிம்மராவ் தயாரில்லை. முதலமைச்சராக நீடிப்பதற்காக பங்காரப்பா நிறைய விலை கொடுத்து வருகிறார். பெங்களூரிலுள்ள பல கோடி பெறுமான 'கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ்' ஒன்று நரசிம்மராவ் மகனுக்கு 'அன்பளிப்பாக' வழங்கப்பட்டிருக்கிறது. நிலைமையை ஆராய டெல்லி அனுப்பி வைக்கும் பார்வையாளர்கள் கூட வெறும் கையுடன் திரும்புவதில்லை'' என்றார் பி.ஜே.பி. தலைவர்.

டைம்ஸ் ஆஃப் இந்தியாவின் பெங்களூர் பதிப்பு, நரசிம்மராவைத் தராசுத் தட்டில் உட்கார வைத்து சூட்கேஸ்களுக்கு மேல் சூட்கேஸ்களாக பங்காரப்பா அடுக்குவதாகக் கார்ட்டூன் ஒன்றை வெளியிட்டது.



* குண்டுராவ் : ஹெக்டேக்குப் போட்டியாக சினிமாவில்...



* பிருந்தாவன் : வாரத்தில் மூன்று நாட்கள் மட்டுமே!

சினிமா மீது அவ்வளவாக ஆர்வம் இல்லாத ராமகிருஷ்ண ஹெக்டேயே கன்னடப்படம் ஒன்றில் நடித்து முடித்திருக்கும் போது தீவிர சினிமா ரசிக

ரான குண்டுராவ் சும்மா இருப்பாரா? தம் பங்குக்கு அவரும் நடிக்க ஆரம்பித்து விட்டார்! படத்தின் பெயர் 'சவி நெனப்புகளு' (இனிக்கும் நினைவுகள்.) வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்படும் ஏழை ஒருவன் படிப்படியாக முன்னுக்கு வந்து முதலமைச்சராவதுதான் கதை. ''முன்பே எம்.ஜி.ஆர். என்னைத் தமிழ்ப் படத்தில் நடிக்கக் கூப்பிட்டார். அப்போது முதலமைச்சராக இருந்ததால் நடிக்க முடியாமல் போய் விட்டது. இப்போது வாய்ப்பு வந்துள்ளது நடிக்கிறேன்'' என்கிறார் குண்டுராவ்.

சென்ற வருடம் தமிழ்நாட்டிற்குக் காவிரித் தண்ணீர் விட வேண்டும் என்று டிரிப்யூனல் தீர்ப்பு வந்ததும், 'தீர்ப்பின்படி தமிழகத்துக்குக் காவிரியைத் திறந்து விட வேண்டும். இல்லாவிட்டால் பிருந்தாவன் கார்டனை வெடிகுண்டு வைத்துத் தகர்ப்போம்' - என்று விடுதலைப் புலிகளிடமிருந்து(?) 'கடிதம் வந்ததாகச்' சொல்லி பிருந்தாவன் கார்டனை இழுத்து மூடி விட்டார்கள். விளைவு : மைசூருக்கு வரும் உல்லாசப் பயணிகளின் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்து விட்டது. கர்நாடக சுற்றுலாத் துறைக்கு ஏகப்பட்ட நஷ்டம். இப்போது எல்.டி.டி.ஈ.யின் பயமுறுத்தல் 'தணிந்ததற்குப்' பின்னர், பிருந்தாவன் கார்டனை மறுபடியும் உல்லாசப் பயணிகளுக்குத் திறந்து விடுகிறார்கள். ஆனால் வாரத்தில் மூன்று நாட்கள் மட்டுமே. புதன், சனி, ஞாயிறு.

- பெர்னாண்டஸ்

# ரன்

ஓட்டம்.... ஓட்டம்....
பறுவேகமான ஓட்டம்... கதாநாயகன் மட்டுமல்ல. படத்தில் இடம்பெறும் நிகழ்ச்சிகளும்தான்.

ஒரு தற்செயலான மரணத்திற்கு அவன் காரணமாகி விட, கொலைக்குற்றம் அவன் மீது சுமத்தப்பட்டுப் போலீஸ் அவனைத் துரத்தத் தொடங்க -

இறந்து போனவனின் தந்தை அனுப்பி வைக்கும் அடியாட்கள் இன்னொருபுறம் விரட்ட -

அடுத்து வரும் நிகழ்ச்சிகள் இயக்குனரின் கற்பனைத் திறனுக்குக் கட்டியம் கூறுகின்றன.

இந்தத் துரத்தலின் விளைவாக, சந்து பொந்துகள் - டிபார்ட்மெண்ட் ஸ்டோர் - நெடுஞ்சாலைகள் - மருத்துவமனையின் அடித்தளத்தில் அமைந்த கார் பார்க் என ஒவ்வொரு இடத்திலும் வரிசையாக அவனுக்கு ஆபத்தைக் கொண்டு வரும் அடுக்கடுக்கான சம்பவங்கள். அதிர்ஷ்டம் அவன் பக்கம் என நிரூபிக்கும் இவற்றின் உச்சகட்டமாக, அடுக்கு மாடிக் கட்டடத்தின் உச்சியிலிருந்து அடியாட்கள் இருவர் அவனைத் தூக்கி எறிய -

அடுத்த வரும் நிகழ்ச்சி மறக்க முடியாத ஒன்று.

கூரான வசனங்கள்.

கத்தி முனைத் திருப்பங்கள்.

கண்சிமிட்டும் வேகம்.

களங்கமில்லாத கதாநாயகன்.

ஒரு விறுவிறுப்பான ஆங்கில நாவலை ஒரே மூச்சில் படித்து முடித்து விட்ட உணர்வு.

- சி. ஆர். கே.



# ஜார்கண்ட் ஜுரம்!

“நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை” என்ற அரசியல்வாதிகளின் வழக்கமான பின்குறிப்பை இணைத்து விட்ட போதிலும் உள்துறை அமைச்சர் எஸ்.பி. சவான், “ஜார்கண்ட் பகுதிக்குத் தனி மாநில அந்தஸ்து அளித்தால்தான் பிரச்னை தீரும்” என்று கூறியதானது, பெரும் பரபரப்பையும் எதிர்ப்பையும் கண்டனத்தையும் தோற்றுவித்தது.

“பீஹாரைத் துண்டாடி ஜார்கண்டைப் பிரிப்பது நடக்கவே நடக்காது. அப்படி ஏதாவது நடந்தால் அது என் பிணத்தின் மீதுதான் நடக்கும்” என்று ஆவேசமாகச் சூளுரைத்தார் பீகார் முதல்வர் லல்லு பிரசாத் யாதவ்.

தெற்கு பீகாரில் உள்ள 13 மாவட்டங்களை (துரதிர்ஷ்ட எண்?) உள்ளடக்கிய பகுதியைத்தான் ஜார்கண்ட் மாநிலமாகப் பிரித்துத் தரக் கோரி போராடுகிறது ஜார்கண்ட் முக்தி மோர்ச்சா. 'அந்தப் பகுதியில் வாழும் ஜார்கண்ட் இன ஆதிவாசி மக்கள், அரசியல் ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் கலாசார ரீதியாகவும் காலம் காலமாகச் சுரண்டப்பட்டு வருகிறார்கள்' என்பது இவர்கள் குற்றச்சாட்டு. 'தனி மாநிலம் ஒன்றுதான் இந்தக் கொடுமைகளுக்குத் தீர்வு' என்று இவர்கள் கருதுகின்றனர்.

ஆனால் பீகார் மாநிலத்தைச் சேர்ந்த இதர அரசியல்வாதிகளின் ஆதரவு இவர்களுக்குக் கிடைப்பது சாத்தியமாகத் தோன்றவில்லை. காரணம், பீகாரின் இந்தப் பகுதிதான் இயற்கை வளங்கள் நிறைந்து, தொழில்துறையிலும் கணிசமாக முன்னேறியுள்ளது. அதை விட்டுக் கொடுத்து விட அவர்களுக்கு மனம் வருமா என்ன? கனிம வளம் மட்டுமின்றி சிமெண்ட், ரசாயன உரம், இதர கனரகத் தொழிற்சாலைகள் எல்லாம் பீகாரின் இந்தப் பகுதியில்தான். நாட்டின் பல்வேறு அனல்மின் நிலையங்களுக்கு நிலக்கரி இங்கிருந்துதான் சப்ளை ஆகிறது. தொழில் நகரங்களான ஜாம்ஷெட்பூர், ராஞ்சி, தன்பாத் முதலியன இந்த வட்டாரத்தில்தான். வேலை வாய்ப்புகளை மிகுதியாகக் கொண்டுள்ள இந்தப் பகுதியை விட்டுக் கொடுக்க எப்படி மனம் வரும்?

ஜார்கண்ட் போராட்டத் தலைவர்கள், “வெளியே இருந்து வருபவர்கள்தான் எங்களை ஆண்டு சுரண்டி வருகிறார்கள். அதனால்தான் எங்களை நாங்களே ஆண்டு கொள்ளத் தனி மாநிலம் கேட்கிறோம்” என்கிறார்கள். பீகாரின் மற்ற அரசியல் தலைவர்களோ, “எப்படியும் ஜார்கண்ட் பகுதியில் ஜார்கண்ட் இன மக்களை விட, வெளியாட்களே மிகுதி. அதனால் தனி மாநிலம் தரப்பட்டாலும் தேர்தல் என்று வந்தால், மறுபடி வெளியாட்கள்தான் ஆட்சிக்கு வருவார்கள். எனவே, ஜார்கண்ட் என்ற தனி மாநிலம் எதற்கு? பீகாரில் ஓர் அங்கமாகவே இருந்து, தங்களின் நியாயமான குறைகளுக்குப் பரிகாரம் தேடலாமே?” என்கின்றனர்.

இன்னொரு சிக்கல், ஜார்கண்ட் இயக்கமே பிளவுபட்டு இருப்பதாகும். ஒரு பிரிவு லல்லுவுக்கு லாலி பாட, இன்னொரு உட்பிரிவு காங்கிரஸுக்குக் குடைபிடிக்கிறது.

ஜார்கண்ட் பிரச்னையைச் சமாளிக்க, “ஜார்கண்ட் வளர்ச்சி வாரியம்” என்பதாக ஒன்றை ஆரம்பிக்கலாம் என்பது பீகார் அரசின் யோசனை. ஆனால், சட்டமன்றத்தில் இது தொடர்பாக நிறைவேற்றப்பட்ட ஒரு மசோதாவில் ஏகப்பட்ட குறைபாடுகள் இருப்பதாக மத்திய அரசு கருதி, ஜனாதிபதியின் ஒப்புதல் கிடைக்காமல் இழுத்தடித்துக் கொண்டிருக்கிறது. இது, “பீகார் ஜனதாதள அரசைச் சங்கடத்துக்குள்ளாக்க மத்திய அரசின் தந்திரம்” என்பதாக ஜனதாதளம் குற்றம்சாட்டுகிறது.

ஜார்கண்ட் முக்தி மோர்ச்சாவுக்கு “அகண்ட ஜார்கண்ட்” என்பதாக ஒரு விசாலமான கனவும் உண்டு! அந்த ஜார்கண்டில், பீகாரில் உள்ள ஜார்கண்ட் பகுதி மட்டுமின்றி, சுற்றிலும் உள்ள மத்தியப் பிரதேசம், ஒரிசா, மே. வங்கம் ஆகிய மாநிலங்களின் சில எல்லைப் பகுதிகளும் சேரும்! ஆனால், அந்த அந்த மாநில முதல்வர்கள், “ஓர் அங்குலம் கூட விட்டுக் கொடுக்க மாட்டோம்” என்று இப்போதே சொல்லி விட்டார்கள்!

இந்தச் சூழலில் மத்திய அரசின் பொறுப்பு மிகுதியாகிறது. காஷ்மீர், பஞ்சாப், அஸ்ஸாம் போல, பிரச்னை எல்லை மீறுமுன் விழித்துக்கொண்டு அமைதிக்கு ஆவன செய்தல் நல்லது.

– ஸ்ரீநிவாசன்

# அறிமுகப்படுத்துகிறோம்

# ரோஸானா




**புரதச்சத்து அதிகம்**

**கொழுப்பு இல்லை**

மீண்டும் பயன்படுத்தக் கூடிய ஜார்.

புதிய ரோஸானா - அதி அற்புதமான சுவைதர வந்துள்ளது. ஆம், மட்டனுக்கு நிகரான ருசியுள்ளது. ஆகவே அது மட்டன் கறி, மட்டன் பிரியாணி, மட்டன் கீமா போன்றவற்றிற்கு ஈடானது. ஆனால் ரோஸானா 100% சைவ உணவாகும். ஆகவே இதை நீங்கள் பாலக் பனீர், அவியல் போன்றவற்றுடன் கூட சமைக்கலாம் . . . வித்தியாசமே சொல்லமுடியாத அளவிற்கு அறுசுவை பெறுவீர்! சமைக்கும் விதம் இதோ: ★ ரோஸானாவை வெதுவெதுப்பான சிறிது உப்பு கலந்த நீரில் 10-15 நிமிடங்கள் நனைத்து வைக்கவும். ★ அது இரண்டு மடங்கு பெரிதானவுடன், உபரியான நீரை பிழிந்து எடுக்கவும் ★ மீண்டும் அதை சுத்தமான நீரில் அலசிய பிறகு உபரியான நீரை பிழிந்து எடுக்கவும். ★ இப்பொழுது நீங்கள் தயாரித்த உணவில் அதைச் சேர்க்கவும். ★ குறைந்தது 2 நிமிடங்கள் வேகவைத்த பின்பு பரிமாறுங்கள். ரோஸானா இரண்டு வசதியான வடிவங்களில் கிடைக்கிறது— 'சங்க்ஸ்' மற்றும் 'கிரானியூல்ஸ்'.

Gx.780.92.Tm.



## உலகம் பாராட்டுகிறது!

# தாய்நாடு தடை விதிக்கிறது!

**பி. டி. ஐ. டீவி சந்திக்கும் சில பிரச்னைகளை இந்த பேட்டியினிடையில் கூறுகிறார் கூட்டுப் பொது மேலாளர் சசிகுமார். அவரைப் புது டெல்லி, நாடாளுமன்றச் சாலையின் கம்பீரமான கட்டடங்களில் ஒன்றான பி.டி.ஐ. கட்டடத்தில் சந்திக்கிறோம். சிறிய, ஆனால் நேர்த்தியாக அழகுபடுத்தப்பட்ட அறை. நேசம் தொனிக்கும் புன்னகையுடன் இடதுகரத்தால் தாடியைத் தடவிக் கொண்டே 'ஹலோ' என வரவேற்கிறார் சசிகுமார்.**

**டீ. வி. யில் செய்தி வாசிப்பவராகத் துவங்கி இன்று இந்த நிறுவனத்தின் உயர் பதவிக்குக் குறுகிய காலத்தில் உயர்ந்திருக்கிறீர்கள். இந்த வெற்றிக்குக் காரணமாக எதைக் கருதுகிறீர்கள்?**

''சென்னை டீ.வி. என் வாழ்க்கையின் ஒரு திருப்புமுனை. ஆங்கிலத்தில் செய்தி வாசித்த பொழுது கிடைத்த வரவேற்பும் நிலைய நண்பர்களின் உதவியும் பல ஆங்கில நிகழ்ச்சிகளைத் தயாரிக்க எனக்கு வாய்ப்புக்கள் பெற்றுத் தந்தன. அப்போது தான் இந்த மீடியாவின் நுணுக்கங்களை, பலங்களை, பலவீனங்களை அறிந்து கொண்டேன். ஆர்வம் தொடர்ந்தது. ஆனால் வாய்ப்புகள் குறைந்தன. (தேசிய ஒலிபரப்பில் சென்னை நிலையம் இணைக்கப்பட்டவுடன் ஆங்கிலத்தில் செய்தியும் நிகழ்ச்சிகளும் தயாரிப்பது நிறுத்தப் பட்டது.) எனவே ஏற்கெனவே பழகியிருந்த பத்திரிகைத் தொழிலுக்குப் போனேன். ''ஹிந்து'' நாளிதழில் சினிமா, கலை நிகழ்ச்சிகள் பகுதியில் விமரிசனம் எழுதிக் கொண்டிருந்தேன். ஆர்வம் காரணமாக சர்வதேச அரசியல் செய்திகளையும் அவற்றின் பின்னணியையும் ஆசிரியர் குழுவுடன் விவாதிப்பேன். இந்த நிலையில் ஒருநாள் 'மேற்காசியச் செய்திகளைத் தொகுத்து அனுப்ப விசேஷ நிருபராக பஹ்ரெய்னுக்குப் போக முடியுமா?' என்று கேட்டு ஆச்சரியத்தில் ஆழ்த்தினார் ஆசிரியர். மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டு பஹ்ரெயினிலிருந்து எழுதிக் கொண்டிருந்தேன்.

புகழ்பெற்ற ஒரு இந்திய நாளிதழுக்கு வெளிநாட்டு நிருபர் என்பது பெருமையான வேலையாக இருந்தாலும் மனம் டீ.வி. நிகழ்ச்சி தயாரிப்பிலேயே இருந்தது. அந்தச் சமயத்தில் இந்தியாவில் தூர்தர்ஷனில் ஸ்பான்ஸர்கள் நுழைந்து தலைதூக்க முயன்று கொண்டிருந்தார்கள். நானும் அப்படி ஏதாவது செய்யலாமே என்ற ஆர்வம் தோன்றியது. 'முத்ரா' என்ற டீ.வி. விளம்பரம், தொடர் நிகழ்ச்சி தயாரிக்கும் நிறுவனம் (ரிலயன்ஸ் க்ரூப்பின் ஓர் அங்கம்) பம்பாயில் அதன் தலைமைப் பொறுப்பை ஏற்குமாறு அழைத்தது. நல்ல வாய்ப்பு என்பதால் 'ஹிந்து' நிர்வாகிகளிடம் விலக அனுமதி கேட்டேன். பாரம்பரியம் மிக்க அந்த நிறுவனத்தின் பதிப்பாளரும் ஆசிரியரும் கனவான்கள். என் தாபத்தைப் புரிந்து கொண்டு சம்மதித்தனர்.




● ..... இன்னும் இங்கே நிறைவேற்றப்படவில்லை!



• சசிகுமார்

ஆனால் அதிக சம்பளத்தில் பொறுப்பேற்ற புதிய வேலையில் ஆறே மாதங்களுக்குள் ஏமாற்றத்தை உணர்ந்தேன். பணம் நிறையக் கிடைத்தாலும் விளம்பரப் படங்களுக்காகவும் மற்றவர்கள் தயாரித்த தொடர் நிகழ்ச்சிகளுக்காகவும் என்னுடைய படைப்புத் திறன் முகம் இழந்து பயன்பட்டுக் கொண்டிருந்தது. இது நமக்கு உரிய இடமில்லை என்று தோன்றியது.

பி. டி. ஐ. தனியாக டீ.வி. அமைப்பைத் துவக்குகிறார்கள் என்று அறிந்து தொடர்பு கொண்டேன். நான் தயாரித்த சில நிகழ்ச்சிகளால் நம்பிக்கை பெற்ற பி.டி.ஐ. ஜெனரல் மானேஜர், என்னைப் பணியில் அமர்த்த முன்வந்தார். சென்னை டீ.வி. வாழ்க்கையின் ஆரம்ப கால நண்பர்களும் வழிகாட்டிகளுமான நிஷாத் அகமது, வீரராகவன் ஆகிய இருவரையும் என்னுடன் பி.டி.ஐ.யில் இணையும்படி வேண்டினேன். தங்கள் வேலைகளை ராஜினாமா செய்துவிட்டு என்னுடன் இணைந்த இவர்களுக்கு பி.டி.ஐ. டீ.வி.யின் இன்றைய வெற்றியில் கணிசமான பங்கு உண்டு. எனக்குத் துவக்கத்தில் தரப்பட்ட சம்பளம் தனியார் துறையில் நான் வாங்கிக் கொண்டிருந்ததில் ஐந்தில் ஒரு பங்குதான். ஆனாலும் படைப்பாற்ற லுக்கு வடிகால் கிடைத்த சந்தோஷம் அதற்கு ஈடுகட்டியது.



• தங்கக் கூடு விருது

**உங்கள் தயாரிப்பில் அரசு சார்பான வாடை அதிகமிருக்கிறதே? பி.டி.ஐ. அரசு தொடர்புடைய நிறுவனமா என்ன? சுதந்திரமாகச் செயல்பட முடியாதா?**

பி. டி. ஐ. அரசு இயந்திரத்தின் ஓர் அங்கம் என்பது மக்களிடையே நீண்ட நாளாக, ஊறிப் போன ஒரு தவறான எண்ணம். உலகின் பல நாடுகளில் இருப்பதைப் போல இது ஒரு செய்தி நிறுவனம். இதில் பி.டி.ஐ. டீ.வி. ஒரு பிரிவு. இவை அரசின் கட்டுப்பாட்டில் இல்லை. அரசு பண உதவி செய்வதில்லை. நிர்வாகத்தில் தலையிடுவதில்லை. முழுக்க முழுக்க சுதந்திரமாகச் செயல்படும் நிறுவனம். எங்களது பல டீ.வி. நிகழ்ச்சிகளில் அரசின் நிலையை அலசியிருக்கிறோம்.

''தயாராக இருக்கும் துப்பாக்கி விசை'' (surrogate trigger) என்ற பஞ்சாப் பற்றிய டெலி படத்தில் உண்மையான நிலை, அரசின் சமாதானங்கள், மக்களின் எண்ணங்கள், எதிர்பார்ப்புகள், ஏமாற்றங்கள் எல்லாவற்றையும் காட்டினோம். அஸ்ஸாம் பற்றிய ''ஸ்டேடஸ் ரிப்போர்ட்'' என்ற படத்தில் உண்மையான நிலையைக் காட்டியதால் ஒரு சாராரின் கண்டனத்திற்கு உள்ளானோம். பிடாரில் (Bidar) நடந்த கலவரம் பற்றிய படத்தில் காங்கிரஸ் கட்சிக்காரர்கள் சம்பந்தப்பட்டிருப்பதாகச் சொன்னதால் பிரச்னைகள் எழுந்தன... நாங்கள் செய்தி தரும் நிறுவனமாகத் தான் செயல்படு

கிறோம். ஆனாலும் கட்சியாகவோ, எதிர்க் கட்சியாகவோ நிலை எடுப்பதில்லை.

வேடிக்கை என்னவென்றால் 'எங்கள் தயாரிப்பில்' அரசாங்க வாசனை அடிப்ப தாக நீங்கள் சொன்னீர்கள். ஆனால் தூர்தர்ஷன் எதிர்க்கட்சி வாசனை அடிப்பதாகச் சொல்கிறது! மணிமேட்டர்ஸ் என்ற ஒரு நிகழ்ச்சியை இரண்டரை ஆண்டுகளாக வாரந் தோறும் தயாரித்து அளித்துக் கொண் டிருந்தோம். நல்ல வரவேற்பைப் பெற்ற இந்த நிகழ்ச்சியின் வீடியோ டேப்பைப் பல நிறுவனங்கள் கேட்டுப் பெற்றன. ஆனால் கடந்த ஆண்டு இதில் வந்த ஒரு பேட்டி அரசின் பொருளாதாரக் கொள்கைகளைக் குறை சொல்கிறது என்று காரணம் காட்டி, அந் நிகழ்ச்சியை தூர்தர்ஷன் ஒளிபரப்ப மறுத்து விட்டது. இதனால் அந்தத் தொடரையே நிறுத்த வேண்டியதாயிற்று. இன்னொரு சம்பவம் :

எங்கள் நிறுவனம் தயாரித்த ஒரு டீ.வி. டாக்குமெண்டரி படத்துக்கு சர்வதேச விருது கிடைத்தது. ஓர் இந்திய டீ.வி. செய்திப் படத்துக்கு இதுவே முதல் விருது. படம் இந்தியப் பெண் குழந்தைகளின் பிரச்னை பற்றியது. குழந்தைகளைப் பணி யில் அமர்த்துவது பற்றிய அரசின் சட்டங் களில் உள்ள ஓட்டைகள் விமரிசனம் செய் யப்பட்டிருந்தன. இதனால் இந்தப் படத்தை தூர்தர்ஷன் ஒளிபரப்ப மறுத்து விட்டது! சீனாவிலும் ஜப்பானிலும் அமெரிக்கா விலும் பார்க்கப்பட்ட இந்தப் படம் இன்னும் நம் மக்களால் பார்க்கப்பட வில்லை. விருது வாங்கிய ஒரு படம் சம்பந்தப்பட்ட மக்களால் பார்க்கப்படா மல் அலமாரியில் தூங்கிக் கொண்டிருப் பதைப் போல துக்கமான விஷயம் எதுவு மில்லை. படைப்பாளிக்குக் கிடைக்கக் கூடிய மிகப் பெரிய பரிசு மக்களின் பாராட்டு தானே?

***நிகழ்ச்சி தயாரிப்பின் போது ஏற்பட்ட அனுபவங்கள் பற்றி...***

கிழக்கு ஐரோப்பாவில் நடந்து கொண் டிருந்த அரசியல் கொந்தளிப்பு ருமேனியா வில் புரட்சியாக வெடிக்கக்கூடும் என்று எதிர்பார்த்து எங்கள் குழு ருமேனியா வுக்குப் பறந்தது. ப்ராங்க்பர்ட்டிலிருந்து ஒரு சரக்கு விமானத்தில் பயணம் செய்து, நள்ளிரவில் விமான நிலையத்திலிருந்து ஒரு லாரியில் தொற்றிக் கொண்டு புகாரெஸ்ட் நகரத்தை நாங்கள் அடைந்த சில மணி நேரங்களில் புரட்சி வெடித்தது. நிகழ்ந்து கொண்டிருந்த ஒரு ஆயுதப் புரட்சியை தெருக்களில் நடந்த ஒரு யுத்தத்தை உலகுக்கு உடனே காட்டிய மூன்று செய்தி நிறுவனங் களில் பி.டி.ஐ. டீ.வி.யும் ஒன்று.

ஆனாலும் எங்கள் பிரச்னைகள் அலாதி யானவை. சுதந்திரமாக நிகழ்ச்சிகளைத் தயா ரிக்கும் நாங்கள் அதை ஒளிபரப்ப அரசின் கட்டுப்பாட்டில் இருக்கும் தூர்தர்ஷனைத் தான் நம்ப வேண்டியிருக்கிறது. இதற்கு மாற்று வகைகளை யோசித்துக் கொண்டி ருக்கிறோம். சமீபத்தில் அயல்நாட்டில் வாழும் இந்தியர்கள் துவக்கியிருக்கும் ''ஏஷியா நெட்'' என்ற ஒளிபரப்பு நிறுவனத் துடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக் கிறோம். ஒரு ரஷ்ய ஸாடிலைட் மூலம் ஒளி பரப்பு ஆகப் போகும் இதன் நிகழ்ச்சிகளை ஸ்டார் டீ.வி. போல் எல்லோரும் பார்க்க லாம். இந்த நிகழ்ச்சிகளைக் கேபிள் டீ.வி. மூலம் மாநிலம் முழுவதும் காட்டக் கேர ளம் மற்றும் வங்காள மாநிலங்கள் அனு மதித்து ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளன. தமிழ்நாட்டில் பரிசீலனையில் இருக்கிறது. (முதல்வர் கவனத்துக்கு வந்ததோ?) இந்தத் தனி ஸாடிலைட் சானல் செயலுக்கு வரும் போது எங்கள் முயற்சிகள் முழுமையாக மக்களை அடையும்.

***செய்தித் தொடர்புடைய நிகழ்ச்சி களைத் தவிர வேறு ஏதேனும் செய்கிறீர் களா?***

நிறைய. தனியார் நிறுவனங்களைப் போலவே மனு செய்து, காத்திருந்து, நிராக ரிக்கப்பட்டு, மறு மனு செய்து தூர்தர்ஷ னுக்குத் தொடர் நிகழ்ச்சிகளைத் தயாரித்து வியாபார ரீதியாகக் கொடுக்கிறோம். குழந் தைகளுக்காகப் பொம்மலாட்டப் பாணி யில் தொடர் நிகழ்ச்சி, 'தானா பானா' (ஊடும் - பாவும்) என்ற சஞ்சிகை நிகழ்ச்சி முதலியன தந்து கொண்டிருக்கிறோம். வேறுபட்ட பல இந்தியக் கலாசாரங்களின் தொகுப்பாக, 'தானா பானா'வைக் கவனத் துடன் தயாரிக்கிறோம்.

இந்த நிகழ்ச்சியின் துவக்கத்தில் வரும் இசை பண்டிட் ரவிசங்கர் அமைத்தது. நிகழ்ச்சியைப் பார்த்த அவர் உங்களின் தலைப்பின் எண்ணம் எனது இசையில் சரியாக வரவில்லை என்று முழுவதையும் மாற்றி அமைத்துக் கொடுத்தார் - ஒரு பைசா காக வாங்கிக் கொள்ளாமல்.

ஒரு நிகழ்ச்சியில் காட்டப்பட்ட ராஜ ஸ்தான் பாணி உடை சரியில்லை என்றும் அது எந்த மாதிரி இருக்க வேண்டும் என்றும் படம் போட்டு அனுப்பியிருந்தார் ஒரு பெண் நேயர்.

நமது டீ.வி. நேயர்கள் ஆர்வம் மிக்க வர்கள். தயாரிப்பாளர்கள் துடிப்பான வர்கள். தேவையானதெல்லாம் சுதந்திர மான சூழ்நிலை. அத்தகைய சூழ்நிலையின் விளிம்பில் நின்று கொண்டிருக்கும் நாம் விரைந்து முன்னேறுவோம் என்று நம்பு கிறேன். அதுவரை காத்திருப்போம்.

சந்திப்பு : ரமணன்

மனிதனின் இயற்கையான குணங்களில் ஒன்று, மிகச் சிறப்பாகச் சிந்தனை செய்வது. ஆனால், முட்டாள்தனமாகச் செயல்படுவது. -
- அனடோல் ஃப்ரான்ஸ். தகவல் : சிவ. கலாதரன்

# பார்க் டவுன் பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை-600 003. ☎ : 582676

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5 | 19% | 20% |

## தனயோகம் டிபாசிட் திட்டம் - வட்டி வீதம் 20%

குறைந்த அளவு டிபாசிட் ரூ.20,000/- காலம் 5 ஆண்டுகள். மாத வட்டிக்கான செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 9.5% வரை வட்டி

உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்துவீர்

5-ம் ஆண்டு முடிவில் ரூ.6000/-ஐத் திரும்பப் பெறுவீர்

10-ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்

15-ம் ஆண்டு முடிவில் மிகப் பெருந்தொகையாக ரூ.50,000/- பெறுவீர்

## பென்ஷனர் நலத்திட்டம்

முதியோருக்கென்றே அளிக்கப்படும் திட்டம்

சேமிப்பு ரூ.13,000/- வட்டி வீதம் - 19% கால வரம்பு 12 மாதங்கள் மட்டுமே

முன்னதாகவே பெறும் காசோலைகள், விதவைகளும், உடல் ஊனமுற்றோர்களும் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் சேர்ந்து பயன் பெறலாம்.

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

| பிரதி மாத டிபாசிட் | ரூ. 25/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும் மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| ரூ.25 | 330 | 715 | 1,180 | 1,800 | 2,510 | 3,350 | 4,370 |
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ

ரூ.7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,20,000/- பெறலாம்

ரூ.9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,44,000/- பெறலாம்

கடன் வேண்டுமா? எங்களை அணுகுங்கள், நகைக்கடன் சவரனுக்கு ரூ.2400/- வட்டி விகிதம் ரூ.1.85 கடனுக்கு உச்சவரம்பு இல்லை. தருவதில் தாமதமில்லை. R.D கட்ட வேண்டியதில்லை...

(Friday Weekly Holiday.)

*கௌரவ ஆலோசகர்:*
P. பாலசுப்ரமணியம், B.Sc
*முதன்மை அறங்காவலர்,*
கந்த கோட்டம், சென்னை-3

*இயக்குநர் குழுத் தலைவர்*
R. விவேகாநந்தன், B.Com.

*பங்குதாரர்களுக்கு மட்டும்:* Business Hours: Week Days 8.30 a.m. to 12.30 p.m. & 2.00 p.m. to 6.00 p.m. Sunday 8.30 a.m. to 12 noon.

—— சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி ——

SURESH


TAMIL NADU DR. M.G.
MADRAS 1992
உங்களுக்-கில்லாத டாக்டர் பட்டமா? இந்தாங்க வாங்கிக்குங்க!
ஆமா... டாக்டர்தான்... ஸ்டெத் கூட கொண்டாந்திருக்கேன்! ஏழைகளுக்கு உதவ உங்களுக்-கெல்லாம் இதயம் இருக்கு-தான்னு சோதிக்க-ணும், வாங்க இப்படி!
பஞ்சப்படி... போனஸ்... எல்லாமா நீங்கதான் தர்றீங்க! ரொம்பத் தாங்க்ஸ்!
ரூ. 1500/- கோடி
நரசிம்மராவ்
பட்நாயக்
அரசு ஊழியர்கள், அதிகாரிகள்
என்யா, சிக்கனம், சிக்கனம்னு சொல்லிக்கிட்டே இப்படித்தான் வாரிவிடறதா? இந்தா, வாங்கிக்க...!
சுப்பிரமணியசுவாமி
ஆஹா! தலைவருங்க அரசியல் சபையையே உருவாக்கறாங்க... அம்மா கவுந்துதான் போறாங்க...
தி.மு.க.
பா.ம.க.
இ. கம்யூ...
வ. கம்யூ...
இதோ, ராஜ்யம் வாங்கிட்டேன்! இங்கேதான் கேம்ப்.. ஜோரா ஊதித் தள்ளிடறேன்...



# கல்கி



1992
அக்டோபர் 11
மலர் : 51
இதழ் : 11
ஆங்கீரச
புரட்டாசி 25

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

## அடிப்படை டாக்டர்கள்!

டாக்டர் பட்டம் என்பது இன்று சர்வ சகஜமாகி விட்டது. மேல் நாடுகள் சிலவற்றில் டாக்டர் பட்டங்கள் வழங்குவதற்கு என்றே ''பல்கலைக் கழகங்கள்'' உள்ளன! அவற்றிடம் குறிப்பிட்ட அளவு பணம் தந்து விட்டால் டாக்டர் பட்டம் வழங்கி விடுகின்றன. தவிர ஆராய்ச்சி செய்து வாங்கும் பட்டங்கள் விஷயத்திலும் இன்று தகிடுதத்தங்கள் நிறைய. காப்பி அடித்து ஆய்வுக் கட்டுரை எழுதுவது ஒருபுறம் எனில், இவருக்குப் பதில் வேறு ஒருவர் எழுதித் தரும் கட்டுரைக்காகக் கண்டுகொள்ளாமல் பல்கலைக் கழகம் பட்டம் வழங்கி விடுவது மறுபுறம். இத்தகைய தில்லுமுல்லுகள் போதாக்குறைக்கு, ஆட்சிக்கு வரும் அரசியல்வாதிகளின் செல்வாக்குக்கு அஞ்சி, பட்டம் வழங்குவதும் இன்று பழகிப் போய் விட்டது. எல்லாமாகச் சேர்ந்து கொண்டதில், பத்மஸ்ரீ, பத்மபூஷன் போல, இன்று டாக்டர் பட்டங்களும் மதிப்பிழந்து விட்டன. எனவே, அண்மையில் டாக்டர் எம்.ஜி.ஆர். மருத்துவப் பல்கலைக் கழகம், தமிழக முதலமைச்சர் ஜெயலலிதாவுக்கு டாக்டர் பட்டம் வழங்கிக் கௌரவித்தது குறித்து அப்படியொன்றும் பெருமைப்படுவதற்கில்லை. பட்டம் வழங்கப்படும் போது வாசித்தளிக்கப் படும் புகழேட்டில் அவரை ஆகாயத்துக்குத் தூக்கி வைத்துப் போற்றியதிலும் வியப்பில்லை.

இவை ஒருபுறமிருந்தாலும் ஜெயலலிதாவின் பட்டமளிப்பு விழாப் பிரசங்கம் அர்த்தமுள்ளதாக விளங்கியது என்பதைச் சொல்லித்தான் ஆக வேண்டும். அதில் ஒரு முக்கியமான அம்சம் அடிப்படை டாக்டர்கள் பற்றியது. Basic doctor என்பதாக அன்று பேசப்பட்ட இந்த டாக்டர்கள், சமுதாய அமைப்பில் மக்களுடன் தொடர்பு கொண்டு, வியாதி முற்றுமுன் கண்டுபிடித்து, தேவையானால் ஆரம்ப அவசர சிகிச்சை அளித்து, தமது சக்திக்கு மீறிய கேஸாக இருப்பின் பெரிய டாக்டரிடம் உடனே அனுப்பி வைப்பவராக இருக்க வேண்டும்; சகஜமாகத் தோன்றும் எளிய நோய்களை அவரே சமாளித்து வெற்றி காண்பவராக இருக்க வேண்டும். முதல்வரின் இந்தக் கருத்து சிறப்பான ஒன்று.

இன்றைய நிலையில், டாக்டர் பட்டம் பெற ஒருவர் ஏகமாகச் செலவழிக்க வேண்டியிருக்கிறது. அந்தப் பணத்தைத் திரும்பப் பெற எண்ணியும், இதர வசதிகளை உத்தேசித்தும், கல்லூரிகளை விட்டு வெளி வரும் டாக்டர்கள் பட்டணங்களிலேயே தங்கி விடுகிறார்கள். கிராமங்களுக்குப் போக மாட்டேனென்கிறார்கள். அரசு திறக்கும் பல ஆரம்ப சுகாதார நிலையங்கள், டாக்டர்களே இல்லாததால் இயங்குவதே இல்லை! போதாக் குறைக்கு எக்ஸ்ரே, ஸ்கான், லாப்டெஸ்ட் என்று ஏகப்பட்ட உபகரணங்கள். இவற்றில் முதலிடாகும் பணத்தையும் வட்டியும் முதலுமாக டாக்டர்கள் திரும்ப எடுக்க வேண்டியுள்ளது! சாமானியன் மருத்துவச் செலவு கண்டு திகைக்கிறான்.

இந்தப் பிரச்னைக்கு முடிவு காண, ஐந்து வருடப் படிப்பு, மேலும் ஓராண்டுப் பயிற்சி என்றில்லாமல், மக்களுக்கு அடிக்கடி வரக்கூடிய நோய்களைக் கண்டறிந்து குணப்படுத்தும் ஆற்றலுடைய டாக்டர்களை உருவாக்கும் மூன்று வருஷப் படிப்பு ஒன்றைத் தோற்றுவிக்கலாம். முன்பு எல். எம். பி. என்று ஒரு படிப்பு இருந்தது. இவர்கள் காய்ச்சலுக்கு மருந்து மாத்திரை தருவதுடன், சிறிய ரண சிகிச்சைகளையும் செய்யும் ஆற்றல் படைத்தவர்களாக விளங்கினார்கள். தங்களால் கவனிக்க முடியாத பெரிய கேஸ் எனில் பெரிய டாக்டரிடம் அனுப்பி விடுவார்கள். இவர்களைப் போன்றவர்கள்தாம் கிராமப்புற மக்களிடம் எளிதாகப் பழகி, அவர்களுக்கு உதவ முடியும். சுகாதாரத்தைக் கடைப்பிடிக்கவும் சுற்றுப்புறச் சூழலைத் தூய்மையாக வைத்திருக்கவும் கற்றுத் தர முடியும். இத்தகைய motivated டாக்டர்களை உருவாக்கி, அவர்களுக்குக் கஞ்சத்தனமின்றி ஊதியமும் தந்தால்தான் கிராமப்புறங்களில் மக்களின் ஆரோக்கியம் பேணுவது சாத்தியமாகும். ஆறு வருடம் படிப்பவர்கள், அதற்கு மேலும் ஸ்பெஷலைஸ் செய்பவர்கள் ஒரு புறம் இருந்தாலும், இத்தகைய அடிப்படை டாக்டர்களுக்கும் இங்கே அவசியத் தேவை உள்ளது.

ஒரு நல்ல யோசனையை வெளியிட்டதற்காக முதல்வரை வாழ்த்துகிறோம்; செயல்படுத்திக் காட்டினால் இப்போது வழங்கப்பட்ட டாக்டர் பட்டத்துக்கு முற்றிலும் தகுதியுடையவர் ஆவார்.



# எம்.ஜி.ஆர். விட்ட சவால்!

திகைத்தாலும் மனம் தளரவில்லை நான். செட்டில் எம்.ஜி.ஆரைச் சந்தித்த போது அவருக்கு ஒரு கதை சொன்னேன். அது அனைவருக்கும் தெரிந்த ஏகலைவன் கதைதான். கடைசியில், ஒரு கேள்வி கேட்டேன் : ''துரோணாச்சாரியார் கட்டளைப்படி கட்டை விரலைக் குருதட்சிணையாகத் தந்து விட்ட ஏகலைவனின் நிலை எப்படி இருந்திருக்கும்?''

எம்.ஜி.ஆர். இதற்குப் பதில் சொல்லாமல், புன்னகையுடன், ''ஏகலைவன் கதை இப்ப எதுக்கு? அதைச் சொல்லுங்க'' என்றார்.

''நீங்க 'லோ ஆங்கிளில் படம் பிடிக்கக் கூடாது' என்று எனக்குத் தடைவிதித்தால் நானும் ஏகலைவன் நிலைக்குத்தான் தள்ளப்படுவேன்'' என்றேன்.

எம்.ஜி.ஆரின் புன்னகை, பலமான சிரிப்பாக மாறியது. 'பலே கில்லாடி ஆசாமிய்யா நீ!' என்று கூறாமல் கூறியது அந்தச் சிரிப்பும் தலையசைப்பும். பிறகு அவர் பேசினார் : ''நீங்க எந்த ஆங்கிளில் வேணுமானாலும் படம் பிடியுங்க; என் முகத்தையே காட்டாமல் முதுகை வேணும்னாலும் காட்டுங்க; உங்களுக்கு முழு சுதந்திரம் உண்டு.''

நான் அவர் கரங்களைப் பற்றிக் கொண்டு நாத்தழுதழுக்க நன்றி கூறினேன்.

**எம்.**ஜி.ஆர். தோட்டத்துக்குப் பக்கத்திலேயே ஒரு கிராமம். அங்கே ஒரு குறிப்பிட்ட தெரு வயற்காட்டில் போய் முடியும். அங்கே படப்பிடிப்பு நடத்த ஊர்ப் பஞ்சாயத்திடம் அனுமதி வாங்கினோம். தெருக்கோடியில் வயல்வெளியையொட்டி ஒரு கிராமத்துப்பாணி வீட்டை நிர்மாணித்தோம். இந்த செட் தவிர, வீட்டின் உட்பகுதி காட்சிகளை எடுக்க, தனியாக ஒரு செட் போட்டோம். இதற்கெல்லாம் ஒத்துழைப்புத் தந்தவர் ஆர்ட் டைரக்டர் அங்கமுத்து. அந்தக் கிராமத்தின் வீடுகளுடன் மிக அழகாக இழைந்தன அவர் செட்கள். செட் போட்டதாகவே தோன்றவில்லை. அத்தனை இயற்கையாக இருந்தது.

ஷூட்டிங் நடந்த நாட்களில் எல்லாம் எம்.ஜி.ஆர். வீட்டிலிருந்து மதிய உணவு வரும். அவருக்கு மட்டுமல்ல; சுமார் இருபது முப்பது பேருக்குக் காணும் அளவில்! என் வீட்டிலிருந்தும் என் மனைவி அனுப்பி வைப்பாள். எம்.ஜி.ஆர்., யூனிட்டில் உள்ள அனைவருடனும் சேர்ந்து உட்கார்ந்து 'விட்' அடித்தபடி சாப்பிடுவார்.

அவர் சினிமாவில் மட்டுமின்றி அரசியலிலும் பாப்புலராக இருந்த தருணம் அது. அதனால் அவுட்டோர் ஷூட்டிங் என்றால் பந்தோபஸ்து இல்லாமல் முடியாது. அவரைக் காணவென்றே ஆயிரக்கணக்கில் மக்கள் கூடி விடுவர். கட்டுப்படுத்தப் போலீஸ் உதவி இன்றியமையாதது. காவல் துறையிடம் சொல்லி, போதிய அளவில் தினம் காவலர்களை அனுப்ப ஏற்பாடு செய்திருந்தேன். ஒருநாள் திடீரென்று, ''பந்தோபஸ்துக்குப் போலீஸ்காரர்களை அடுத்த மூன்று தினங்களுக்கு அனுப்ப முடியாது'' என்று மேலிடம் கூறி விட்டது. காரணம், டில்லியிலிருந்து ஒரு வி.வி.ஐ.பி. சென்னை வந்து பல நிகழ்ச்சிகளில் பங்கேற்றதுதான்.

இது தெரிந்ததும் நான் நேரே எம்.ஜி. ஆரிடம் போய், ''ரிஸ்க் எடுக்க வேண்டாம்; அடுத்த மூன்று நாட்களுக்கு ஷூட்டிங்குகளைக் கான்ஸல் செய்து விடுவோம்'' என்றேன்.

எம்.ஜி.ஆரோ பரபரப்படைந்து, ''எந்தக் காரணம் கொண்டும் ஷூட்டிங்கை கான்ஸல் பண்ணாதீர்கள். மறுபடி ரீ ஷெட்யூல் பண்ணுவது உங்களுக்கும் சரி, எனக்கும் சரி ரொம்பக் கஷ்டமாகி விடும். போலீஸ் வராவிட்டால் என்ன? பரவாயில்லை, நான் கவனித்துக் கொள்கிறேன். நீங்க கவலைப்படாமல் போய் மேலே ஆக வேண்டிய காரியங்களைப் பாருங்க'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார்.

அவர் சொல்லை என்னால் தட்ட முடியவில்லை என்றாலும் ரொம்பக் கவலையாகத்தான் இருந்தது. 'கூட்டத்தை எப்படிச் சமாளிப்பது? ஆர்வ மிகுதியில் எம்.ஜி. ஆரைக் கூட்டம் நெருங்க, ஏதாவது அசம்பாவிதமாக நடந்து விட்டால் என்ன பண்ணுவது?' என்று உள்ளூர நடுக்கத்தோடேயே ஸ்பாட்டில் எல்லாவற்றையும் கவனித்துச் சரி செய்து கொண்டிருந்தேன்.

**டைரக்டர் ஸ்ரீதர்**



* பாலாஜி : "ஒரு ரூபாய் கூட வாடகை வாங்க மாட்டேன்!"

குறித்த நேரத்தில் எம்.ஜி.ஆர். தமது காரில் வந்து இறங்கினார். அவர் பின்னாலேயே ஒரு வேன். அதிலிருந்து தொப் தொப்பென்று இருபது இருபத்தைந்து பேர் சீருடை அணிந்து குதித்தார்கள். இப்போது அரசு உருவாக்கியுள்ள பூனைப் படை போல் தான் வாட்டசாட்டமாக இருந்தார்கள் - மைனஸ் ஏ.கே. 47! எம்.ஜி.ஆர். இலேசான ஒரு தலையசைப்புடன் கண்களாலேயே உத்தரவிட, அவர்கள் ஷூட்டிங் ஸ்பாட்டைச் சுற்றி வியூகம் அமைத்தது போல் நின்றார்கள். அவர்கள் மக்களைத் திறமையாகக் கட்டுப்படுத்த, ஷூட்டிங் எந்தவித இடையூறுமின்றி மூன்று நாட்களும் நடந்தது. ''போலீஸ் வராவிட்டால் என்ன? நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று எம்.ஜி.ஆர். கூறியதன் உட்பொருள் எனக்குப் புரிந்தது.

'உரிமைக் குரல்' படத்தின் கிளைமாக்ஸ் காட்சியில் வில்லன்கள் கதாநாயகியைக் கடத்திப் போவார்கள். கதாநாயகன் ரேக்ளா வண்டியில் அவர்களைத் துரத்திச் செல்வான். இதற்கேற்ற லொகேஷனை நான் தேடிய போது, வண்டலூர் அருகே பட அதிபர் பாலாஜியின் பல ஏக்கர் தோட்டம் இருப்பது தெரியவந்தது. பாலாஜியை நான் அணுகவும், ''ஓ! தாராளமாய் ஷூட்டிங்கை அங்கே நடத்திக் கொள்ளலாம்'' என்று கூறி விட்டார்.

இதிலே இன்னொரு சிக்கலும் இருந்தது. கிளைமாக்ஸ் காட்சியில் வில்லனின் ஆட்கள் பயிர்களுக்கு நெருப்பு வைத்து நாசம் செய்வது போல் வரும். பாலாஜி தோட்டத்தில் இரண்டடி உயரம் நெற்பயிர் வளர்ந்திருந்தது!

நான் பாலாஜியிடம் விஷயத்தை விளக்கி, தோட்டத்தைப் பயன்படுத்த வாடகை தவிர, பயிர்களுக்கு நஷ்டஈடும் தருவதாகக் கூறினேன்.

பாலாஜி கோபமாக என்னை முறைத்தார். ''என்ன ஸ்ரீதர் இது! ஒரு ரூபாய் கூட வாடகை வாங்க மாட்டேன். தோட்டத்தில் உங்களுக்கு எப்படி இஷ்டமோ அப்படி படம் எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் பணம், காசு என்று பேச்செடுத்தால் என் தோட்டம் உங்களுக்குக் கிடைக்காது!'' என்றார்.

எனக்கு தர்மசங்கடமாகி விட்டது. கிளைமாக்ஸை மாற்றி அமைக்கலாமா என்று கூட யோசித்தேன். ''ஏதாவது ஒரு



தொகை வாங்கிக் கொண்டுதான் ஆக வேண்டும்'' என்று பாலாஜியை வற்பு றுத்திப் பார்த்தேன்.

மனுஷன் பிடிவாதமாக மறுத்ததுடன், ''ஸ்கிரிப்டில் ஒரு மாறுதலும் வேண்டாம்; கோ அஹெட், ஆல் தி பெஸ்ட்!'' என்று கை குலுக்கி விட்டார். நான் நன்றிப் பெருக்கில் உணர்ச்சிவசப்பட்டுப் போனேன்.

சண்டைக் காட்சிகளில் எம்.ஜி.ஆர். கூடுமானவரை டூப் போடாமல் தாமே நடிப் பார். சில சமயம் டூப் போட வேண்டிய நிர்ப் பந்த நிலை தோன்றினால் அப்போது ஒரு கொள்கையைக் கடைப்பிடிப்பார். அது, அவர் தமது இமேஜ் பற்றி எவ்வளவு கவன மாக இருந்தார் என்பதற்கு ஓர் உதாரணம். தாம் நடிக்க வேண்டிய சண்டைக் காட்சி களை முதலில் எடுத்து விடச் சொல்வார். பிறகு ஒருநாள் டூப் போட்டு எடுக்க வேண் டிய காட்சிகளை எடுத்துக் கொள்ளச் சொல் வார். அன்று அவர் ஷூட்டிங்குக்கே வர மாட்டார்! தாமும் தமது டூப்பும் ஒருசேர செட்டில் இருப்பதை யாருமே பார்க்கக் கூடாது என்பது அவரது உறுதியான எண் ணம். ஷூட்டிங்கெல்லாம் முடிந்த பிறகு, எடிட்டிங் அறைக்கு எம்.ஜி.ஆர். தாமே வரு வார். தாம் நடித்த சண்டைக் காட்சிகளையும் டூப் நடித்தவற்றையும் அற்புதமாக இணைத் துத் தருவார். திரையில் பார்க்கும் போது நமக்கு பிரமிப்பு ஏற்படும்படி எடிட்டிங்கில் செய்து விடுவார். 'உரிமைக் குரல்' படத் திலும் சண்டைக் காட்சிகளை அவரே எடிட் செய்து அளித்து, படத்தின் வெற்றிக்கு உறு துணையாக இருந்தார்.

'உரிமைக் குரல்' படத்தின் பாடல் காட்சிகளை மைசூரில் படமாக்கிய போது ஒரு விநோதமான பந்தயம் வைத்தார் எம். ஜி.ஆர்.! அந்தப் படத்துக்கு டான்ஸ் மாஸ் டர் சலீம். அவரிடம் அன்று அசிஸ்டண்டாக இருந்தவர்தான் இன்று மிகப் பிரபலமாக விளங்கும் புலியூர் சரோஜா. நடன நடிகை யர் நிறையப் பேர் பங்கேற்கும் நடனக் காட்சிகளைப் படம்பிடித்து முடித்ததும், அன்றிரவு அவர்களையெல்லாம் பஸ் ஏற்றி, சென்னைக்குத் திருப்பி அனுப்புவதாக இருந்தது. திடீரென்று எம்.ஜி.ஆர். நடன நடிகையருக்குத் தாம் ஒரு விருந்து கொடுக் கப் போவதாக அறிவித்தார்! அவர்கள் அத்தனை பேரும் மகிழ்ச்சியில் திக்குமுக் காடிப் போனார்கள். விருந்து என்பதால் அல்ல; அதன் மூலம் எம்.ஜி.ஆர். தங்களை மதிக்கிறார் என்பதால். பெருமிதத்துடன் விருந்தில் கலந்து கொண்ட அனைவருக்கும் எம்.ஜி.ஆர். ஒரு சவால் விட்டார்! ''இப் போது பாயசம் பரிமாறப்படும். ஒவ்வொரு வரும் எத்தனை கப் முடியுமோ குடியுங்கள்! மிக அதிகமாகக் குடித்தவரை விட ஒரு கப் பாயசம் அதிகமாக நான் குடித்துக் காட்டு கிறேன்!''



# அடையாறு ஆற்றங்கரையில் அழகுத் தோட்டம்!

ஐந்து நட்சத்திர ஹோட்டல் - அட்டகாச மான அறைகள்; அரச குமாரர்கள் அனுப விக்கும் சொகுசு. அறுசுவை உணவு. ஆனால் அறையையொட்டிய வராந்தாவிலிருந்து வெளியுலகைப் பார்க்கும் எண்ணத்துடன் வந்து நின்றால்... குப்பென்ற துர்நாற்றத் துடன் தேங்கி, தயங்கி நகரும் கூவத்தின் கறுப்பு நீர்!

கன்னிமரா ஹோட்டலின் வடக்குப்புற அறைகளில் தங்கிய அயல்நாட்டினர் இதைக் கண்டு முகம் சுளிக்க, நிர்வாகம் கவலை யுற்றது. நிர்வாகத்தின் உபதலைவர் சங்கர் மேனன், கன்னிமராவின் பாதுகாப்பு மேலாளர் சுரேஷ் பாலை அழைத்தார். ஹோட்டல் வளா கத்துக்கும் கூவம் நதிக்கும் இடையே இருந்த நிலப்பரப்பைக் குத்தகைக்கு வாங்கி விடும்படி கூறினார்.

"அவர் என்னை அழைத்துப் பேசியது மூன்று ஆண்டுகளுக்கு முன்... ஆனால் 90 மீட்டர் நீளமும் 25 மீட்டர் அகலமும் உள்ள அந்த நிலப்பரப்பை ஐந்து ஆண்டு குத்த கைக்கு எடுத்துச் சீர் செய்வதற்குள் தான் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல..." என்கிறார் சுரேஷ் பால்.

"பொதுப் பணித் துறைக்குச் சொந்தமான அவ்விடத்தைக் குத்தகைக்குப் பெறவே ஓர் ஆண்டு ஆயிற்று. ஐந்து வருடங்களுக்குள் இடத்தை அழகுபெறச் செய்யாவிட்டால் அதனை மீண்டும் பொ. ப. துறைக்கே திருப்பி யளித்து விட வேண்டும் என்பது நிபந்தனை!

"பாம்புகள் உட்பட பலவகை அபா யங்கள் மண்டிக் கிடந்த அவ்விடத்தை மிகவும் கஷ்டப்பட்டுச் சீர் செய்தார்கள் எங்கள் பணி யாளர்கள். புதர்களையும், காட்டுச் செடிகளை யும், கற்களையும் அகற்றி, சுற்றிலும் வேலி போட்டதுதான் தாமதம்... ஆயிரம் விளக்குப் பகுதி யில் உள்ள சில சேரிவாழ் மக்கள், ஆட்சேபணை எழுப்பினார்கள். அவர்கள் பின்னி சாலைக்குச் செல் லும் குறுக்கு வழியை நாங்கள் அடைத்து விட் டோம் என்பது அவர்களது வாதம். எனவே அவர் களுக்குச் சிறிது இடம் ஒதுக்கி ஒரு நடைபாதை யும் அமைத்துத் தந்தோம்.

"நாங்கள் குத்தகைக்கு எடுத்த நிலத்தினையொட்டி பின்னி சாலையில் நாற்பத் தைந்து ஆண்டுகளாக டீக் கடை வைத்து வியாபாரம் செய்து வந்தார் ஒருவர். அவருக்கு 40,000 ரூபாய் நஷ்டஈடு கொடுத்துக் கடையை அப்புறப்படுத்த வேண்டியிருந்தது.

"பின்னர், ஒருவழி யாகக் குத்தகை எடுத்த நிலத்தில் தோட்டம் போட ஆரம்பித்தோம்..." என்கி றார் சுரேஷ் பால்.

இப்போது கன்னிமராவையொட்டி ஓடும் கூவத்தின் ஓரமாக, வரிசையாக நடப் பட்ட நூற்றுக்கும் அதிகமான மரக் கன்றுகள்; ஒரு சரிவிலே பச்சை வெல்வெட்டாகப் புல் தரை; இவற்றுக்கு இடையேயும் வேலி ஓரங் களிலும் பல நிறச் சிதறல்களை அள்ளி வீசும் போகன்வில்லா செடிகள்; புடலை, பூசணி, கீரை, கத்திரி, வெண்டை எனக் காய்கறிப் பாத்திகள், பந்தல்கள்... என அழகான தோட்டம் உருவாகியிருக்கிறது. தாஜ் குருப் ஹோட்டல்களின் தோட்டக்கலை ஆலோசகர் ராமாராவ் இத் தோட்டத்தைக் கலைநயத்துடன் வடிவமைத்திருக்கிறார்.

கன்னிமராவின் எக்ஸிகியூடிவ் ஹவுஸ் கீப்பர் விஜயலக்ஷ்மியின் மேற்பார்வையில் வளரும் தோட்டம் இப்போது 1/4 கிலோ 1/2 கிலோ என்று கொஞ்சமாகக் காய்கறிகளைத் தர ஆரம்பித்திருக்கிறது. அவை முழுப் பலனை ஈந்தாலும் ஹோட்டலின் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாது. கண்ணுக்கும் மனத் துக்கும் இதமளிக்க வேண்டும் என்பதே நோக்கம்.

"இன்னும் சில மாதங்களில் நாங்கள் நட்ட மரக் கன்றுகள் நன்றாக வளர்ந்து கூவத்தின் அழுக்குக் காட்சிகளைப் பசுமைத் திரையால் மறைத்து விடும்" என்று ஹோட்டல் நிர்வா கத்தினர் உற்சாகத்துடன் சொல்கிறார்கள்.

பின்னி சாலை பாலத்தின் மீதிருந்து பார்த்தால் கூவத்தின் மற்ற கரைப் பகுதிகள் ஏக்கப் பெருமூச்சு விடுவது போன்ற பிரமை நமக்கு ஏற்படுகிறது.

- நிர்மலா சக்ரவர்த்தி

படம் : பாலாஜி

# தேவேந்திரா சாரீஸ்

**மிக மிக உயர்ந்த பட்டும், நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**

**H.O. 27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை - 3, போன் : 583213.**

**கிளை ஷோ-ரூம் கடை எண் : 7, ராம்ஸ் பஜார் (பனகல் பார்க் எதிரில்)**

**தியாகராய நகர், சென்னை - 17. போன் : 443367**

## தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள் :

★ காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38, W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புதுடில்லி - 110 005. போன் : 581050, 561786; ★ மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41, சரஸ்வதி மார்க், W.E.A. கரோல்பாக், புதுடில்லி - 110005; ★ காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ் (சவுத் என்டு) 9ஏ/40, W.E.A. கரோல்பாக், புதுடில்லி. போன் : 5723981; ★ பங்கஜம் சுந்தரராஜன், CG/A.D.D.A. Flats, முனிர்கா, புதுடில்லி - 67; ★ நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய் - 19; ★ சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7, பிவந்திவாலா பில்டிங், எல். என். ரோடு, மாதுங்கா, பம்பாய் - 400 019; ★ லதா கிருஷ்ணன், பிளாட் நெ. 20, காமதேனு கோ-ஆப்.பெஸ்டம்சாகர், செம்பூர், பம்பாய் - 89 (கிளாஸ் பாக்டரி அருகில்); ★ ஜெயஸ்ரீ, 2-ஏ, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா - 26; ★ திருமதி டி.எஸ். சகுந்தலா சீனிவாசன், 18/1-ஏ, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா அன்டு பலப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர். போன் : 224357; 96/1, கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து) பெங்களூர் - 560 003; ★ திருமதி. துர்காம்பாள், தரங்கிணி, 26, லாவண்யா கார்டன்ஸ், வயலூர் ரோடு, திருச்சி - 620 017. போன் : 34422; ★ சித்ரா அசோசியேட்ஸ், 50/பி, பாணாதுரை தெற்கு வீதி, கும்பகோணம். போன் : 20972; ★ திருமதி எஸ். லட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம் - 1 (ரயில்வே ஸ்டேஷன் அருகில்); ★ ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, செங்குப்தா தெரு, கோயம்புத்தூர் - 9; ★ ஸ்ரீமுருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர். எஸ். புரம், கோவை - 2; ★ மஹாராஜா சில்க்ஸ், 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி - 1, போன் : 4191; ★ மகாலட்சுமி சில்க் சென்டர், நீன் பில்டிங் (உள்புறம்), 175/11, மேல வீதி, சிதம்பரம்; ★ ஹேமாவதி ஏஜென்சீஸ், 2711, நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர்; ★ பாகீரதி மூர்த்தி, 100, ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி; ★ எல். ஆர். பகவதி, 15, பள்ளத் தெரு, வடிவீஸ்வரம், நாகர்கோவில்; ★ கே. என். கிட்டப்பா, 61, யானைக் கட்டித் தெரு, சின்ன காஞ்சிபுரம்; ★ திருமதி கே. சீதாலட்சுமி, 41, 4-வது ட்ரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப் பாக்கம், சென்னை - 28. போன் : 73244; ★ திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை - 61. (பிள்ளையார் கோவில் அருகில்) போன் : 2343737; ★ சரோஜா கிருஷ்ணமூர்த்தி, ஏபி. 1186, 4-வது தெரு, தென்றல் காலனி, (பி.டி.சி. டிப்போ எதிரில்) அண்ணாநகர், சென்னை - 600 040; ★ பாலாஜி கிளாத் சென்டர், 22-ஏ, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை - 45; ★ திருமதி. சுலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை - 44; ★ கலா மோகன், 115, ராகவாச்சாரி தெரு, பெரம்பூர், சென்னை - 11. போன் : 575483; ★ எஸ். பொன்னப்பன் டெக்ஸ்டைல்ஸ், 2வது பஜார், (மார்க்கெட் போலீஸ் ஸ்டேஷன் அருகில்), செகந்திராபாத் - 500 003. போன் : 877938, 875562; ★ ராணி சாரீஸ், ராணி எஸ். கிருஷ்ணமூர்த்தி, 13, மஹால் 4-வது தெரு, (திருமலை நாயகர் மஹால் பின்புறம்) மதுரை - 625 001. போன் : 26295; ★ ஆர். கிருஷ்ணமூர்த்தி, பெரிய கண்ணாரத் தெரு, மயிலாடுதுறை; ★ திருமதி கமலா நாகஸ்வாமி, 52, சரஸ்வதி நகர், கடலூர், போன் : 112; ★ திருமதி பிரேமா குருராஜன், 1, எஸ். லக்ஷ்மி நிலையம், அரசினர் ஆசிரியர் பயிற்சி பள்ளி அருகில், தருமபுரி - 636 701; ★ எஸ். உமாராணி, 132, செட்டித் தெரு, பாண்டிச்சேரி.

**குறிப்பு : மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.**

# முற்றுகை

## 11

வீட்டுக்குள் மாமா உட்கார்ந்திருப்பாரே.

''வாங்க மாமா'' என்று உபசாரமாக ஒரு வார்த்தையாவது கேட்க வேண்டுமே. எப்படிக் கேட்பது? கூச்சமும் நடுக்கமுமாய் இருக்கிறதே....

நான் அந்த அளவுக்குப் பெரிய மனுஷியா? உபசாரமாய் வாங்க என்று கேட்காமல் இருக்க, சின்னப் பிள்ளையும் இல்லையே... இது என்னடா வம்பாய்ப் போச்சு!

இவர்... பழைய நாராயணசாமி என்றால் கதையே வேறு. இவள் ஏறிட்டுப் பார்க்கக் கூட அருகதையில்லாதவர். ஊரிலேயே பெரிய குடும்பத்தின் வாரிசு, இவள். மரியாதை, அந்தஸ்தோடு வாழ்ந்த குடும்பத்தின் கொழுந்து.

இவள் வீட்டில் காளைமாடுகளைப் பராமரிக்கிறவனுக்கு என்ன தகுதியோ... அதுதான் இவருக்கும்...

ஆனால், இப்போது -

• இவர் அக்காவின் புருஷன். இந்த வீட்டின் மருமகன். பத்து வயசுப் பருவத்தில் இவர் விரலைப் பிடித்துக் கொண்டு விளையாடிய ஞாபகங்கள், அவரும் ஒரு தந்தையைப் போல இவளுடன் சிரித்து, விளையாடிய நினைவுகள்.

'வாங்க' என்று கேட்காமல் இருந்து விட்டால், மாமா வருத்தப்படுவாரோ... ஊரில் போய் அக்காவிடம் சண்டை போடுவாரோ...

உள்திண்ணையில் உட்கார்ந்திருந்தார் மாமா.

ஏகமாய்த் த ய ங் கி, லஜ்ஜையுடன் மாமாவை ஒருகணம் பார்த்தாள்.

''அடடே... சொர்ணமா? இப்பத்தான் வேலை முடிஞ்சு வாரியா?''

நல்ல வேளை! அவரே கேட்டு விட்டார். மனசின் இறுக்கம் சட்டென்று தளர்ந்தது.

''ஆமா, மாமா. எப்ப வந்தீக?'' தொண்



## மேலாண்மை பொன்னுச்சாமி

டைக்குள் சப்தமாகக் கேட்டாள்.

"மத்தியானமே வந்துட்டேம்மா."

"அக்காவைக் கூட்டிட்டு வரக்கூடாதா, மாமா?"

"இல்லேம்மா. நா ஒரு முக்கியமான விஷயமா வந்தேன்."

தூக்குச்சட்டியை அம்மாவிடம் தந்தாள். சிட்டையையும் டப்பாவையும் பல கையில் வைத்தாள். பக்கடா பொட்டலத்தை ரமேஷிடம் தந்தாள்.

"இந்தாடா."

"அய்ய்! சித்தி பக்கடா வாங்கிட்டு வந்துருக்கா."

அந்தச் சிறுவனின் இயல்பான குதூகலமும் வெடிச் சிரிப்பும் இவளையும் தொற்றிக் கொண்டன. மயிலிறகால் நீவிவிட்ட சுகம், மனசில்.

நாராயணசாமி வெத்தலையை 'சக்கு, சக்'சென்று மென்று கொண்டே சொர்ணத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்தான்.



"ரமேஷ் வீட்டுக்கு வந்துருக்கான்னு டவுன்லேயே தெரிஞ்சுக்கிட்டியா?"

"என்ன மாமா?"

"இல்லே, மகனுக்குன்னு பக்கடா வாங்கிட்டு வந்துருக்கியே, அதான் கேட்டேன்."

ஏதோ நகைச்சுவையைச் சொல்லி விட்டவனாய்ச் சிரித்தான். பாவம், அம்மாவும் நிழலாய்ச் சிரித்தாள். உடனே முகம் வாடிவிட்டது.

சொர்ணமோ பெருமிதக் கூச்சத்தில் ஒரு புன்னகையை மட்டும் உதிர்த்தாள். அந்தச் சின்ன உதடுகள் மூடிய நிலையில் மெல்லிசாக விரியும் போது வருகிற பேரழகைக் கவனித்தான், நாராயணசாமி.

"அம்மா... மாமா சாப்ட்டாகளா?"

அம்மா முகம் இருண்டு கிடந்தது. ஆழமான உள் வேதனை குடைகிற மாதிரி யோர் முகவாட்டம். எதையோ கண்டு அரண்டு போனவளைப் போல பம்மிக் கிடந்தாள். அம்மாவுக்குரிய சுமாரான உயிர்க்களை கூட இன்று சுத்தமாய்க் காணாமல் போயிருக்கிறது.

என்னாச்சு? இங்கு என்ன நடந்து விட்டது?

இவளுக்குள் திகிலான குறுகுறுப்பு.

சொர்ணம் கேட்டதற்கு வேலாயி என்னவோ வறண்ட குரலில் பதில் சொன்னாள். காதில் வந்து விழக்கூடிய அளவுக்குக் கூட உயிர்ப்பசையோ, தெளிவோ இல்லை. என்ன கேடு நிகழ்ந்து விட்டது இங்கு?

"ஆச்சம்மா. இப்பத்தான் வச்சுக்குடுத்தாக. சாப்புட்டுட்டுத்தான் வெத்தலை போட்டுக்கேன்."

அம்மாவைச் சினந்து பார்த்த சொர்ணம், மாமா சப்தம் கேட்டுத் திரும்பினாள். மாமாவின் நிழல், மேலச் சுவரில் கரும்பூதமாய் அசைந்தது.

"அக்கா எப்படியிருக்கா, மாமா?"

"இருக்கா...."

மாமா பதிலில் இருந்த சலிப்பு, இவளுக்குள் வேதனையாகப் புரண்டது. விதம் விதமான யூகங்களைத் தூண்டிப் பயமுறுத்தியது.

"என்ன மாமா, ஒடம்புக்கு ஏதாச்சும்?"

"அதெல்லாம்... நல்லாத்தான் இருக்கு."

"பெறகு?"

"பாவம் கிட்ணம்மா. காட்லேயும் உசுரைக் குடுத்துப் பாடுபடுறா. வீட்லேயும் ஓய்வில்லாம முதுகை ஒடிக்கிற வேலை.



## வெள்ளி கேட்டால் வெள்ளரிக்காயா?

மாஸ்கோவிலிருந்து 580 கி.மீட்டர் தெற்கே உள்ள சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. காரணம் உள்ளூரில் இருந்த வங்கியில் போதுமான பணம் (cash) இல்லாதது தான். அதற்குப் பதிலாக வெள்ளரிக்காயும் இறைச்சியும் வழங்கப்பட்டது! ஆனால் 'எங்களுக்கு காசுதான் தேவை' என்று பிடிவாதமாக அந்தத் தொழிலாளர்கள் சுரங்கத்தை விட்டு வெளியேற மறுத்து ஸ்டிரைக் செய்தனர்!

நன்றி : 'சன்'

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்

நாறிப்போகுது. ஒத்தையிலே கிடந்து சீரழியுறா.''

மாமா.. இதைச் சொல்லிவிட்டு ஏதோ உள்ளர்த்தம் தொனிக்க அம்மாவைப் பார்த்தார். அந்தப் பார்வையை வெறுப்புடன் புறம் தள்ளுவதைப் போல, தலையைச் சொறிகிற சாக்கில் அடுப்பங்கரைப் பக்கம் திரும்பிக் கொண்டாள் அம்மா.

சொர்ணத்திற்குள் சின்னதாய் ஒரு நிழலிருட்டு. முகம் காட்டிவிட்டு நகர்கிறதில்.

''நீயும் சாப்புடுடி.''

''ஆட்டும்மா.''

''அந்தப் பயலையும் சாப்பிடச் சொல்லு.''

''ம்.''

அடுப்பங்கரைக்குள் நுழைந்தாள்.

''டேய் ரமேஷ், சாப்பிட வாரியாடா?''

''ஆட்டும் சித்தி.''

''இங்க வா கண்ணு.''

''ம்?''

''தம்பிக என்னடா செய்றாக? அவுகளையும் கூட்டிட்டு வரக் கூடாது?''

''அய்யா யாருக்கும் தெரியாம, சைக்கிள்லே ஒத்தையிலே கிளம்புனாரு. நா பாத்துட்டேன். வாரேன்னு அழுதேன். அப்புறம் தான் என்னை வஞ்சிக்கிட்டே சைக்கிள்லே ஏத்திக்கிட்டாரு.''

அவன் திக்கித்திக்கிச் சொல்கிற 'அழகில்' சொர்ணம் அப்படியே பூரித்துப் போனாள். சோறு வைத்துக் குழம்பு ஊற்றினாள். உட்கார்ந்தாள். மகனையும் பக்கத்தில் இழுத்து வைத்துக் கொண்டாள். வலது காலைச் சப்பணமிட்டு, இடதுகாலை மடக்கிக் கொண்டு குனிந்து சாப்பிட்டாள்.

''சாப்புடுடா...''

அம்மாவும், மாமாவும் குசுகுசு வெனப் பேசுகிற சப்தம். வருத்தமாய் அம்மா விடுகிற பெருமூச்சின் இரைச்சல். கசிந்த குரலில் அம்மா முணுமுணுத்து விசும்புகிற சப்தம்.

என்னத்தைப் பேசுகிறார்கள்? எதற்காக அழணும்? அம்மாவைப் பற்றிக் கொண்டு வதைக்கிற விஷயம் எது? ஒரு வேளை... விஷயம் தன்னைப் பற்றியதாக இருக்குமோ....?

இனம் புரியாமல் மர்மமாய் மிரட்டுகிறதில். திகைப்பு.

கண்ணுக்குப் புலப்படாத மாயப் புகைக் கூட்டம் தன்னை மொய்த்து முற்றுகையிட்டதைப் போல - அரூபமாய் நாசிக்குள் நிபுநிபுவெனப் புகுந்து நெஞ்சடைப்பது போல - சுவாசிக்க முடியாமல் இருதயம் இயக்கமற்று தவிப்பதைப் போல -

ஒரு பிரமை. பிரமைதானா? உண்மையின் அரூபமான நிழலா? மனசைக் கவ்விக் கொண்ட கிலி.

**மா**மா உறங்கி விட்டார். ரமேஷ் சொர்ணத்துடன் ஒண்டிக் கொண்டு தூங்கிப் போனான். தூக்கம் அண்டாமல் அவஸ்தையோடு புரண்டு படுக்கிறாள், அம்மா. சப்தம் கேட்கிறது.

ஏதோ ஒரு கவலை அவளைப் புரட்டி எடுக்கிறது. நிலை கொள்ள விடாமல் அவஸ்தைப்படுத்தி, குரூரமாய் விளையாடுகிறது.

இவள் அடுப்பங்கரைக்குள் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது - அவர்கள் குசுகுசுத்த பேச்சில் ஒன்றிரண்டு புரிவது போலிருந்தது....

''நா சொல்ற வார்த்தையைக் கேளுங்கக்கா. காடுகரைகளும் தரிசா கெடக்கக் கூடாது. கன்னிப் பொண்ணையும் வீட்லே வைச்சிக்கிட்டிருக்கக் கூடாது. நாலா திசையிலேயிருந்தும் யோசனை பண்ணிப் பாருங்க. நா சொல்றது நியாயம்னு படும்.''

''அதெல்லாம் சரிதான் தம்பி. செல்வம் பொழிஞ்ச இந்தக் குடும்பம், காலக் கொடுமையினாலே தரித்திரத்துலே வந்து பேயாட்டம் போடுது. கிட்ணம்மா கதை தான் இப்படியாகிப் போச்சு. விதிப்பலன். காடுகரைகள்லே கொதிக்கிற வெயில்லே கிடந்து பாடுபடுறவங்கொடுமையில்லாத வாழ்க்கையை, சொர்ணத்துக்காச்சும் அமைச்சுக் குடுத்துடணும்னு, இந்தப் பாழும் மனசு தவிக்கக் கிட்டிருக்கு, தம்பி.. இதான் என் நெனைப்பு.''

இவ்வளவுதான், காதில் விழுந்த வார்த்தைகள். அதற்கு முன்னும் பின்னும் என்ன

பேசிக் கொண்டிருந்தார்கள்? ஒரு இழவும் தெரிய மாட்டேன் என்கிறது.

மாமா எங்ப சொல்கிறார்? தெரியவில்லை. ஆனால் ஒன்று புரிகிறது. இவளுக்குத் தூரமானது; விரோதமானது; கத்தி வளைத்து நிர்ப்பந்தப் படுத்துவது; சிறகுகளை நறுக்கக் கூடியது.... அமாவாசை. சாஸ்வத அமாவாசை.

அடித்தரையறியாத ஆழத்திற்குள் மூழ்கிக் கொண்டிருந்த நினைவுகளைச் சட்டென்று நிறுத்தினாள். ச்சே! என்ன இது. என்ன ஏது என்று தெரிந்து கொள்ளாமலேயே, எதற்காக பயந்து சாகணும்?

அய்யா இருந்திருந்தால்.... பயந்து சாக வேண்டியது இருக்குமா?

அப்போது... இவளுக்கு எட்டு வயதிருக்கும். கால்களில் கொலுசு சங்கீதம் பாட... வீடு முழுக்க பட்டாம் பூச்சியாக ஓடித்திரிவாளே....

எங்கு ஓடினாலும் எதிலாவது மோதத்தான் வேண்டும். அப்படி.... வீடு நிறைய தட்டுமுட்டுச் சாமான்கள். சீதேவி.

ஓடித்திரிகிற இவளைக் கொஞ்சுகிற வேலையாட்கள். ''சின்னம்மா சின்னம்மா'' என்று தேனாகக் கொஞ்சுகிற சத்தம்.

அந்தத் தேன் வெள்ளத்தை ஏறெடுத்துப் பார்க்காமல் ஓடி விளையாடிய சொர்ணம்.

மூக்கு ஒழுக, கிழிந்த பாவாடைகளோடு, பரட்டைத் தலையோடு இவளுடன் விளையாட வருகிற சிறுமிகள்.

''அடியே.... அடியே....''

அம்மாவின் கூப்பாடு கேட்கும். ஏனென்று கேட்கவே மாட்டாள். வேலைக்காரிகள் மாறிமாறி வருவார்கள்.

''சின்னம்மா, சின்னம்மா உங்களை அம்மா கூப்டுறாக.''

வேலைக்காரிகள் குழைவோடு நீட்டுகிற ஓலைகளையெல்லாம் வாங்கியே பார்க்க மாட்டாள்.

ஒரே விளையாட்டுத்தான்.

வேலாயியே வ ரு வா ள். வந்து இவளைப் பிடித்துக் கொள்வாள். வேலாயியின் கோபம் பூராவும் கூட விளையாட வந்த சிறுமிகளைத்தான் கிழிக்கும்.

''வேலையத்த கழுதைக, எதுக்கு இங்க வந்து எம்புள்ளையைக் கெடுக்கீக? கொரங்குகளா, விளையாட வந்துருக்கிற மூகரைகளைப் பாரு. வக்கத்த கழுதைக. யார் கூட உங்க விளையாட்டு? சீமான்புள்ளை கூட விளையாட்டா? ஒரு தராதரம் வேண்டாம்?''

வேலாயியின் சீறலில் அந்தச் சிறிசுகள் பதறிச் சாகும். அப்படியே பம்மிப்பதுங்கும். கிள்ளி வெயிலில் போட்ட பூவாக முகம் வாடிச் சிறுத்துப் போகும்.

அரவமில்லாமல் ஒவ்வொன்றாக வெளியேறி விடும்.

இவளுக்கு அதுவும் கூட ஒரு வேடிக்கையாகத்தான் இருக்கும். ஒரே சிரிப்பாணியாகச் சிரித்துப் பொங்குவாள்.

கடைசியில் -

வேலாயி இவளிடமும் சீறுவாள். 'வெறுங் கழுதைகளோடு சமதையாக' விளையாடியதற்காக அதட்டுவாள்.

''நீ யாருன்னு நினைப்பு இருக்கா? ராசாமகள். இப்படி நீ தரங்கெட்டு விளையாடுறது உங்க ஐயாவுக்கு தெரிஞ்சதுன்னா... அம்புட்டுத்தான். ஒன்னையும் என்னையும் தோலை உரிச்சு உப்பைத் தடவிருவாரு. தெரியுமா?'' என்பாள்.

சொர்ணச் சிறுமி இப்படியேதான் உணர்த்தப்பட்டு வளர்க்கப்பட்டவள். அவளுக்கு அவளே இப்படித்தான் அறிமுகமானாள்.

நீ உசத்தி. தரம் உயர்ந்தவள். உன் தலையில் கிரீடம் இருக்கிறது. கிரீடத்தைச் சுற்றி ஒளிவட்டம் சுடர்கிறது. நீ தேவ மகள். நீ தேவதை.. நீ ராசாமகள்.

தான் ராசா மகள் என்றால், இந்தப் பெரிய்ய வீடுதான் அரண்மனை என்று மனசுக்குள் ஒரு படிமம் விழும்.

(தொடரும்)

''உன்னோட மாமனார், எப்பப் பார்த்தாலும் தனக்குத் தானே பேசிக்கிட்டிருக்காரே - இது என்ன பழக்கம்-னு எடுத்துச் சொல்லி நிறுத்தக் கூடாதோ?''

''கேட்டால், என்னோட பேசறதுக்கு வேற எந்தப் பயலுக்குத் தகுதி இருக்கு-ன்னு கேட்கிறார்! என்ன பண்ணச் சொல்றே?''

- பெ. கலாசாமி.



## நா.நாகராஜன்



கிருஷ்ணா வீட்டின் வாசலில் வந்து நின்றான். ராமனாதனின் அம்மாதான் முதலில் அவனைக் கவனித்தாள்.

சோமசுந்தரம் இன்னும் கல்லூரிக்குக் கிளம்பவில்லை. இன்று அவர் மெதுவாகப் போனால் கூடப் போதும். இது கடைசி வருடம். அடுத்த மார்ச்சில் பார்ட்டி கொடுத்து வீட்டிற்கு அனுப்பி விடுவார்கள். மூத்த பெண்ணிற்கு இன்னும் கல்யாணம் நிச்சயமாகவில்லை.

ஏற்கெனவே அவருக்கு லேட்டான கல்யாணம். விவேகானந்தர், அரவிந்தர், ரமண மகரிஷி, பட்டினத்தார், பதினொரு சித்தர்கள் என்று நிறையப் படித்து, இல்லற வாழ்க்கையே வேண்டாம் என்று இருந்தவரை - திருமணத்திற்குச் சம்மதிக்க வைத்தது அவரது அம்மாவின் உடல்நிலை. ஒரே பையன் வேறு!

இன்று ரிடையராகப் போகும் வருடத்தில் அம்மாவும் இல்லை... அப்பாவும் இல்லை!

அவர்களால் - அவர்களுக்காக வந்த கவிதாவும் - அவளால் வந்த ரம்யா, ராமனாதன் இரண்டு குழந்தைகளும் வளர்ந்து பெரியவர்களாகி பிரச்னைகளாகி நிற்கிறார்கள்.

ரம்யாவையாவது சேமிப்பையும் கவிதாவின் நகைகளையும் போட்டுக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விடலாம்.

ராமனாதனின் பாடு...?

பி.ஈ. மூன்றாவது வருடம் படிக்கின்ற பையன் குண்டர்கள் சட்டத்தில் உள்ளே போவான் என்று அவர் கனவிலும் நினைக்கவில்லை.

அந்த நிகழ்ச்சிக்குப் பின் வீட்டின் கலகலப்பு அடியோடு காணாமல் போய் விட்டது.

லீவிற்கு வீட்டிற்கு வந்தால் கூட படிப்பு கெட்டு விடும் என்று நினைக்கின்ற பையனா கொலைகாரர்களுக்குத் தன் ரூமில் இடம்கொடுத்து உடந்தையாக இருப்பான்?

கிருஷ்ணா - ராமனாதனின் நண்பன். முதலில் வந்து செய்தியைச் சொன்னதும் கடவுளின் படம் முன்னால் சரிந்து உட்கார்ந்து அழத்தான் முடிந்தது கவிதாவால்.

''பயப்படாதேங்கோ மாமி. இப்போது அந்த ஊர்ல குற்றம் நிறைய ஆயிடுத்து. வெடிகுண்டும், அரிவாள் வெட்டும் தினப்படி காட்சி ஆயிடுத்து. பட்டப்பகல்ல, நட்ட நடு ரோட்டுல முதலாளி - தொழிலாளிங்கற வர்க்கபேதம் இல்லாம எல்லாரும் சாகறா. எனக்கு ஒரு இன்ஸ்பெக்டரைத் தெரியும். மாமா வந்தா பேசிச் சமாளிக்கலாம்...''

அந்த நேரத்தில் அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் மாதிரி கவிதாவிற்கு இந்த கிருஷ்ணன் தோன்றினான்.

அவனுடனேயே போய், கல்லூரி லைப்ரரியில் சோமசுந்தரத்தைத் தேடி விஷயம் சொன்னான்.

''இதென்ன அநியாயம்! நான் இப்பவே வர்றேன்...'' என்று உள்ளே போய் விட்டு, பிரின்சிபாலிடம் பெர்மிஷன் சொல்லி விட்டு வந்தார்.

மூன்று பேரும் நடந்து வரும்போது சோமசுந்தரத்திற்கு என்ன தோன்றியதோ, ''நீ வீட்டுக்குப் போய்க்கோ. ரம்யா தனியா இருப்பா...'' என்று சொல்லி மனைவியை அனுப்பி விட்டார்.

ஸ்டேஷனில் மரியாதைக்குக் குறைவில்லை. நிதானமாகக் கேட்டார்கள். அவ



# வைரமுடைய நெஞ்சு வேண்டும்

ரது நிலைக்காக வருத்தப்பட்டார்கள்.

ஆனால், ராமனாதனை வெளியே விடுவது நடக்காத காரியம் என்று திட்ட வட்டமாகச் சொல்லி விட்டார்கள்.

சோமசுந்தரம் தளர்ந்து போனார். கிருஷ்ணா பயமில்லாமல் போலீஸிடம் பேசினான். புத்திசாலித்தனமாக வாதிட் டான். இருந்தும் எதுவும் எடுபடவில்லை.

சோமசுந்தரம் இதுநாள்வரை போலீஸ் ஸ்டேஷனின் படிகளை மிதித்ததில்லை.

யாரிடமும் சண்டை போட்டு ஒரு போலீஸிடம் கூட வார்த்தை கேட்ட தில்லை.

ராமனாதன் படிப்பையும், கிரிக்கெட் டையும், கமல், நசிருதீன் ஷா, நடிப்பையும், மகாராஜபுரத்தின் பாட்டையும் தவிர வேறு எதுவும் தெரியாத குழந்தை.

வளர்ந்து விட்டானே என்ற முரட்டுத் தனமோ, பி.ஈ. படிக்கிறோமே என்ற கர்வமோ இல்லாமல் அம்மாவுடன் மாடி யில் வடாம் பிழிவான். கமல் மாதிரி பரத நாட்டியம் ஆடுவான். மாடியில் வயலின் வாசிப்பான், 'ஹிண்டு'வுக்குக் கடிதங்கள் எழுதுவான். விநாயக சதுர்த்திக்குப் பிள்ளையார் கோயிலில் சப்பரம் தூக்கு வான்.

அவன் குண்டர்கள் சட்டத்திலா...?

கவிதா வந்து கதவைத் திறந்தாள்.

''வா.. கிருஷ்ணா... ஏதாவது தெரிந் ததா...''

சோமசுந்தரம் சாப்பாட்டை நிறுத்தி விட்டுக் கையை அலம்பித் துண்டால் துடைத்தபடி வந்து ஒரு நாற்காலியை நகர்த்திப் போட்டார்.

''கல்லூரி சேர்மனோட போய் எம்.எல்.ஏ.யைப் பார்த்தோம்...''

''அப்புறம்...?''

''கேஸ். ரொம்ப ஸ்ட்ராங்கா இருக்கு. பண்டிகை காலம்ங்கறதுனால நிறையப் பேர் லீவு. இவன் பன்னிரண்டு மணி வரை விளக்கைப் போட்டுண்டு படிச்சதும், தூக்கம் வராம இருக்க ஜன்னத் ஹோட்டல்ல டீ குடிக்கப் போனதும், பக்கத்துல அந்த முன்னாள் முனிசிபல் சேர்மன் கொலை யுண்டு கிடந்ததும் சந்தேகத்தைக் கிளப்பி இருக்கு. இவன் ரூமில அந்தக் கொலை யாளிகள் தங்கி இருக்கா. இவன் எவ்வ ளவோ சொல்லியும் அவா இவனை மிரட்டி இருக்கா. இவன் சொன்னதை அவாளும் கேக்கலை. போலீசும் கேட்கலை. ரெண்டு மணி நேரத்துல பிடிச்சுட்டா...''

கிருஷ்ணா தெளிவாகப் பேசினான்.

''உன் ரிலேடிவ் இன்ஸ்பெக்டர்னு சொன்னியே...'' கவிதா நம்பிக்கை இழந்து போய்க் கேட்டாள்.

''அவரும் கையை விரிக்கிறார். 'எங்க ளால முடியாது. அது எங்க ஏரியாவுக்கு உள்ள வராது'ங்கறார்.''

ரம்யா தூணோரம் நின்று கேட்டுக் கொண்டிருந்தாள்.

ராமனாதனை ஜெயிலில் போய்ப் பார்க்க அவர்கள் அவளை அனுமதிக்க வில்லை - கல்யாணமாகப் போகிற பொண்ணு.

''என்ன பண்ணலாம் கிருஷ்ணா? லாய ரைக் கன்சல்ட் பண்ணலாமா...''

''கேட்டுட்டேன். தடுப்புக் காவல் சட்டத்துல அத்தனை லேசில வெளில கொண்டு வர முடியாதுங்கறார்...''

**சோ**மசுந்தரம் சிலை போல் ஆனார். கல்லூரியில் எல்லாரும் அவரை அனுதாபமாகப் பார்க்கிற மாதிரி இருந் தது.

தெருவில் தெரிந்தவர்கள் நாலைந்து பேர் துக்கம் விசாரிக்கிற குரலில் கேட் டார்கள்.

ஷேவ் செய்து கொள்ளத் தோன்ற வில்லை. பக்திபூர்வமாகப் பூஜை செய்ய முடியவில்லை. மனம் விண்டு போய்க் கிடக்கிறது.

பாம்பேயிலிருந்து ரம்யாவின் ஜாதகம் பொருந்தி இருப்பதாய்ச் சொன்னவர் களுக்கு அவளின் புகைப்படம் அனுப்ப வில்லை.

அவரது பழைய சர்வீஸ் ரெகார்டுகளை முன்னால் பணிபுரிந்த கல்லூரியிலிருந்து வாங்கி அனுப்ப முடியவில்லை.

மனம் ஒன்றிக் கல்லூரியில் பாடம் நடத்த முடியவில்லை.

உறவினர்களிடமிருந்து தினந்தோறும் கடிதம் வந்தது.

வருத்தத்தின் உச்சியில் அவர் சொன் னார்,

''அவனுக்கு ஏதாவது விபத்து நடந் திருந்தாக் கூட அவனை எப்படி குணப் படுத்தணும்னு நமக்குத் தெரியும். இதுல பிரார்த்தனையைத் தவிர வேற எதுவுமே செய்ய முடியலையே.''

**கி**ருஷ்ணா அடிக்கடி வந்தான். கல் லூரியின் நிலவரத்தைச் சொன்னான். ஜெயி லில் போய் ராமனாதனைச் சந்தித்ததை, அவன் களைத்துப் போய்க் கண்களில் சோர்வும் அவநம்பிக்கையுமாய்க் காணப் படுவதை, வந்து சொன்ன போது பெற்ற வயிறு பதறியது.

ஓரிரு பத்திரிகைகள் கவிதாவைக் கண்ணீருடன் படம் பிடித்துக் கதை யெழுதின...

உள்ளூரின் சில கட்சிக்காரர்களும் கல்லூரி மாணவர்களும் போஸ்டர்களில் கோபப்பட்டனர்.

''கடைல போய் சாமான் வாங்க முடி யலை, கவிதா. எல்லாரும் துக்கம் விசாரிக் கறாங்க...'' என்ற சோமசுந்தரத்தை ஆறுதல் படுத்த வார்த்தைகள் இல்லாமல் பார்த்தாள் கவிதா.

ஒவ்வொரு நாளும் நகர்வது ஒவ்வொரு யுகமாகத் தெரிந்தது. ஏதோ யோசனையில், இரவில் டாய்லெட் போகப் போன சோம சுந்தரம் வழுக்கி கீழே விழுந்தார்.

லைட்டைக் கூடப் போடத் தோன் றாமல் நடு ஹாலின் ட்யூப் லைட் வெளிச் சத்தில் அங்கே போனவர் பெரிய சப்தத் துடன் அண்டாவின் மேல் விழுந்திருக் கிறார்.

கவிதா ஒரு நிமிஷம் திடுக்கிட்டு விழித்து வாசல் பக்கம் பார்வையைச் செலுத்தி ஆராய்ந்த பிறகு, இவர் பின் பக்கம் விழுந்து கிடப்பதைப் பார்த்து விட்டுப் பதறிப் போய் ஓடி வந்தாள்.

நல்ல அடி, ரத்தம் கொட்டியது முழங் கையிலிருந்து. நல்லவேளை. துவைக்கும் கல்லில் விழவில்லை.

ரம்யா வேகமாகச் செயல்பட்டாள். அவளே டார்ச்சுடன் போய் எதிர்வரிசை கடைசியில் இருக்கும் டாக்டரைக் கூட்டி வந்தாள்.

கவிதா ஸ்டவ்வில் ஹார்லிக்ஸ் போட் டுக் கொடுத்தாள்.

''ராமனாதா... ராமனாதா....'' என்று அரற்றியபடி படுத்துக் கிடந்த அவரைப் பார்க்கும் போது கவிதாவுக்கும் ரம்யா வுக்கும் வயிற்றைச் சங்கடம் பண்ணியது.

'என்ன ஆகப் போகிறது எங்களுக்கு? இன்னும் என்ன என்ன விபரீதங்கள் நடக்க இருக்கின்றன இந்தக் குடும்பத்துக்கு...'

டாக்டர் கொடுத்த மயக்க ஊசி வலியை மறக்கச் செய்து தூக்கம் வரவழைக்கச் செய்தாலும் அவரது உதடுகள் அசைந்த வண்ணம்தான் இருந்தன.

காலையில் கண் விழித்தவர் எழுந் திருக்கத் தடுமாறினார். ''ரம்யா...''

''வரேன்ப்பா...''



''என்னைக் கொஞ்சம் தூக்கி நிறுத்து. பின்பக்கம் போகணும்...''

''கஷ்டப்படாதீங்கோ. அம்மாவைக் கூப்பிடறேன்... எழுந்திருக்க வேண்டாம்.''

அவர் அவளை மிரள மிரளப் பார்த்தார்.

''கிருஷ்ணா... கிருஷ்ணா வந்தானா...?''

''இல்லே... வருவான். வர்ற நேரம் தான்.''

ரம்யா சமையல் வேலைகளில் அம்மாவுக்கு உதவினாள். அவளே போய் காய் வாங்கி வந்தாள். அப்பாவிடம் கையெழுத்து வாங்கிப் போய் பேங்கில் பணம் எடுத்து வந்தாள்.

சாப்பிடும் சமயம் அம்மாவிடம் மெதுவாகக் கேட்டாள். ''அங்கே அடிப்பாளாம்மா...?''

''தெரியலை...''

''ஒரு சின்ன காயத்துக்கே அப்பா இப்படி கஷ்டப்படறாரே. பிரம்படி அவனுக்குத் தாங்குமா. உடனே டாக்டரை விட்டு ட்ரீட்மெண்ட் கொடுப்பாளா?''

கவிதா 'தெரியலை' என்கிற ஜாடையில் தலையை அசைத்தாள்.

''அடி வாங்கி, அவமானப்பட்டு, முரட்டுத்தனம் கூடி, அண்ணன் வன்மத்தோட வெளில வரும் போது ஒரு தீவிரவாதியா மாறிடலாம் இல்லையா...?'' ரம்யா நிதானமாகத் தன் சந்தேகத்தைக் கேட்டாள். இந்த பயந்த பெண்ணிற்குள் இத்தனை சிந்தனைகளா?

கவிதா பதில் சொல்லத் தெரியாமல் ரம்யாவையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

சோமசுந்தரம் இருமுவது கேட்டது.

''அப்பா....''

''இங்கே வாம்மா...''

''என்ன...?'' பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

''அம்மாகிட்டே என்ன கேட்டே...?''

''ஒண்ணுமில்லேப்பா... சாதாரணமாப் பேசினேன். பொழுதுபோக்குக்கு ஏதாவது பேசணும் இல்லையா. பேசலைன்னா அழுகைதான் வருது...''

''இல்லேம்மா... நீ சீரியஸா ஏதோ சந்தேகம் கேட்டியே...'' அவருக்கு முழுமையாகக் கேட்டிருக்க வேண்டும்.

''ஒண்ணுமில்லேப்பா....''

''இல்லம்மா. நான் சொல்றேன் - நீ என்ன கேட்டேன்னு. அண்ணன் அடி வாங்கி முரடனா, மூர்க்கனா மாறிடுவானோன்னு சந்தேகப்பட்டே....''

''ஆமாம்பா...''

''அவன் யாரு...?''

''உங்க பையன்...''

''நான் ஏன் இத்தனை சிரமங்களைத் தாங்கிக்கறேன். நான் ஏன் வன்முறையாளனா மாறலை. எனக்குத் தெரியும் என் தெய்வம் என்னைக் கைவிடாதுன்னு.. இதெல்லாம் சோதனைதான். தற்காலிகம் தான்...'' என்றார்.

ரம்யாவுக்கு அந்த உறுதி பிடித்திருந்தது. ''அப்பா...'' என்றாள்.

# விமானம் தோன்றுமுன்பே விரிந்தது பாராசூட்!

## அட, அப்படியா!

!! சியாப்ஸ் என்ற எகிப்திய மன்னன் 4600 ஆண்டுகளுக்கு முன் பயன்படுத்திய கப்பலின் சிதறிய பாகங்கள் அவனது கல்லறை (பிரமிட்) அருகே புதையுண்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றை ஒன்று சேர்த்து முழுக் கப்பல் உருவில் அமைத்து அருங்காட்சியகத்தில் வைத்துள்ளார்கள். உலகின் மிகப் பழமையான கப்பல் இது தான்.

!! நீரைக் கிழித்துக் கொண்டு வேகமாகச் செல்லும் ஒரு வகை மெலிதான நீண்ட அழகிய பாய்மரக் கப்பல்களுக்கு Schooners என்று பெயர். தட்டையான சில்லுக் கற்களைக் குழந்தைகள் குளம் குட்டைகளின் மேல்பரப்பில் தொட்டும் தொடாமலும் செல்லும் வண்ணம் லாகவமாக வீச



வார்கள். schooning என்று அழைக்கப்படும் இந்த விளையாட்டின் நினைவாகத்தான் நீரின் மீது பட்டும் படாமலும் செல்வது போல் தோன்றும் இவ்வகைக் கப்பல்களுக்கும் அப் பெயர் வந்தது.

!! 'ஜீப்' என்ற வாகனத்துக்கு அப் பெயர் எப்படி வந்தது தெரியுமா...? இரண்டாம் உலகப் போர் சமயத்தில் புழக்கத்துக்கு வந்தது இந்த வாகனம். General Purpose (பலவிதமான உபயோகங்களுக்கு ஏற்றது) என்பதன் சுருக்கமாக G.P. என இதற்குப் பெயரிட்டார்கள். அதுவே பின்னர் Jeep ஆயிற்று.

!! ஏரோப்ளேன்கள் உருவாவதற்குச் சுமார் ஒரு நூற்றாண்டு முன்னரே பாரசூட்கள் உருவாக்கப்பட்டு விட்டன. Jean Pierre Francois Blanchard என்ற ஃப்ரெஞ்சுக்காரர்தான் முதல் பாரசூட்டை உருவாக்கினார். அதன் உபயோகத்தை நிரூபிக்க ஒரு நாய்க் குட்டியைப் பயன்படுத்தினார். அதன் முதுகில் பாரசூட்டைக் கட்டி, ஒரு பலூனில் அதனுடன் வான வெளியில் மிதந்தார். அங்கிருந்தபடி நாய்க்



குட்டியைத் தூக்கிப் போட்ட போது பாராசூட் விரிந்து, நாய் அழகாகத் தரை இறங்கியது.

!! மனிதத் தயாரிப்புகளிலேயே நேற்றுவரை மிக நீளமானது கனடாவிலுள்ள ஓர் எண்ணெய்க் (பெட்ரோல்) குழாய். 1775 மைல் நீளமுள்ள இக் குழாய் அல்பெர்டா முதல் ஒன்டாரியோ வரை நீள்கிறது. பிறநாடுகளில் இதைவிட நீளமான பெட்ரோலியம் எண்ணெய்க் குழாய்கள் அமைக்க இன்று அவசியம் நேர்ந்து விட்டது.

!! உலகின் மிக ஆழமான ஏரி ரஷ்யாவிலுள்ள பைக்கல். இதன் சில பகுதிகள் ஒரு மைல் ஆழத்துக்கும் அதிகமானவை.

தொகுப்பு : உதய்லால்

# சிவகாமியின் சபதம்

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்
## காபாலிகையின் காதல்

வானை நோக்கிக் கைகளைத் தூக்கிப் பல தெய்வங்களின் பேரில் ஆணையிட்டுச் சபதம் செய்த பிக்ஷு மறுபடியும் கீழே உட்கார்ந்து புலிகேசியின் உயிரற்ற உடலை எடுத்துத் தம் மடியின் மீது வைத்துக் கொண்டார்.

"தம்பி! நீ சாகவில்லை. இத்தனை நாளும் நாம் இருவரும் இரண்டு உடலுமாக வாழ்ந்து வந்தோம். இப்போது உயிரைப் போல் உடம்பும் ஒன்றாகி விட்டோம். என் உயிரோடு உன் உயிர் ஒன்றாகக் கலந்து விட்டது. இனிமேல் நீதான் நான்; நான்தான் நீ! இரண்டு பேர் இல்லை!"

இவ்விதம் உருகிக் கனிந்த குரலில் கூறி விட்டுப் புத்த பிக்ஷு தமது தேகம் முழுவதும் குலுங்கும்படியாக விம்மி விம்மி அழுதார்.

சுயப் பிரக்ஞையை அறவே இழந்து சோகக் கடலின் அடியிலே அவர் ஆழ்ந்து விட்டார் என்று தோன்றியது.

இரவு விரைவாகச் சென்று கொண்டிருந்தது. சந்திரன் மேலே மேலே வந்து கொண்டிருந்தது.

பாறைகள் - மரங்களின் நிழல்கள் வர வரக் குட்டையாகிக் கொண்டு வந்தன.

நெடுநேரம் பாறை மறைவில் நின்று காத்துக் கொண்டிருந்த காபாலிகை கடைசியில் பொறுமை இழந்தாள்.

மெதுவாகப் பாறை மறைவிலிருந்து வெளிப்பட்டு மெள்ள மெள்ள அடிமேல் அடிவைத்து நடந்து வந்தாள்.

பிக்ஷுவின் பின்புறத்தில் வந்து நின்று அவருடைய தோள்களை இலேசாக விரல்களால் தொட்டாள்.

புத்த பிக்ஷு திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்.

"ரஞ்சனி! நீதானா?" என்றார்.

"ஆம்; நான்தான்!" என்றாள் காபாலிகை.

"இன்னும் நீ போகவில்லையா?"

"போகச் சொல்லி ஆக்ஞாபித்தால் போய் விடுகிறேன்."

"வேண்டாம், இரு! இந்தப் பெரிய உலகில் என்பேரில் அன்பு உடையவள் நீ ஒருத்திதான் இருக்கிறாய்."

"என் பேரில் அன்பு கொண்டவர் ஒருவருமே இல்லை."

"ஆ! ரஞ்சனி! ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? நான் ஒருவன் இல்லையா?" என்றார் பிக்ஷு.

சற்றுமுன் அவருடைய குரலில் தொனித்த சோகம் எங்கேயோ போய் இப்போது அதில் கபடங் கலந்த நயிச்சிய பாவம் தொனித்தது.

"அடிகளே! ஏன் இந்தப் பேதையை ஏமாற்றப் பார்க்கிறீர்? இந்தக் கோர அவலட்சண உருவத்தின் பேரில் யாருக்குத் தான் பிரியம் ஏற்படும்!" என்று காபாலிகை கேட்டாள்.

"காதலுக்குக் கண்ணில்லை என்று நீ கேட்டதில்லையா? நீ எத்தனை குரூபியாயிருந்தாலும் என் கண்ணுக்கு நீதான் ரதி!" என்றார் புத்த பிக்ஷு.

"வஞ்சக பிக்ஷுவே! ஏன் இப்படி மனமறிந்து பொய் சொல்லுகிறீர்? என்னை

**அமரர் கல்கி**

இந்த அலங்கோலம் ஆக்கினது நீர்தானே? என் பேரில் அன்பு இருந்தால் இப்படிச் செய்திருப்பீரா?'' என்றாள் அந்தக் கோர காபாலிகை.

''ரஞ்சனி! இதைப் பற்றி எத்தனை தடவை உனக்குச் சொல்லி விட்டேன்? அஜந்தா சித்திரத்தைப் போன்ற அற்புத அழகோடு வாதாபி அரண்மனையில் நீ இருந்தால், யாராவது ஒரு இராஜகுமாரன் உன்னை அபகரித்துக் கொண்டு போய் விடுவான் என்றுதானே இப்படிச் செய்தேன்?''

''என்னைத் தாங்களே அபகரித்துக் கொண்டு போயிருக்கலாமே? யார் வேண்டாம் என்று சொன்னது?''

''அதையும்தான் உனக்கு ஆயிரம் தடவை சொல்லியிருக்கிறேன். மறுபடியும் சொல்லுகிறேன். நான் செய்ய வேண்டிய காரியங்கள் சில இருந்தன. முக்கியமாக, புத்த சங்கத்திலிருந்து விடுதலை பெற வேண்டியிருந்தது.''

''இப்படித்தான் எத்தனையோ கால மாய்ச் சொல்லி வருகிறீர். எப்போதுதான் உமக்கு விடுதலை கிடைக்கப் போகிறது?''

''ரஞ்சனி! எனக்கு விடுதலை கிடைத்து விட்டது! உன் மனோரதம் நிறைவேறுவதற்கான பெருந்தடை நீங்கி விட்டது. உனக்குச் சந்தோஷந்தானே?'' என்று பிக்ஷு நயமாகக் கூறினார்.

''சத்தியமாகச் சொல்லுகிறீரா?'' என்று ரஞ்சனி கேட்டாள்.

''முக்காலும் சத்தியமாகச் சொல்லுகிறேன். நான் விடுதலை கேட்கவே தேவை ஏற்படவில்லை. புத்த சங்கத்தாரே என்னைப் பிரஷ்டம் செய்து விட்டார்கள். உன்னுடைய தபஸின் சக்தியினால்தான் இது நடந்திருக்க வேண்டும்.''

காபாலிகை இன்னும் சந்தேகம் நீங்காதவளாய், ''ஏன் பிரஷ்டம் செய்தார்கள்? சர்வ சக்திவாய்ந்த நாகநந்தி பிக்ஷுவைப் புத்த சங்கத்தார் எப்படிப் பிரஷ்டம் செய்யத் துணிந்தார்கள்?'' என்று கேட்டாள்.

''அது பெரிய கதை. அப்புறம் சொல்லுகிறேன். ரொம்ப முக்கியமான வேலை இப்போது நமக்கு இருக்கிறது. இதோ இந்த உடலை உடனே தகனம் செய்ய வேண்டும். யாருக்காவது தெரிந்து விட்டால் காரியம் கெட்டு விடும். எங்கே ரஞ்சனி! கட்டைகள் கொண்டு வந்து இங்கேயே சிதை அடுக்கு. பார்க்கலாம்.''

''என்னால் அது முடியாது!''

''ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? எனக்கு உதவி செய்ய மாட்டாயா?'' என்றார் புத்த பிக்ஷு.

''புத்த சங்கத்திலிருந்து உம்மை ஏன் பிரஷ்டம் செய்தார்கள்? அதைச் சொன்னால் உதவி செய்வேன்.''

• ''சுருக்கமாகச் சொல்லுகிறேன், கேள்! காஞ்சி மாமல்லன் படையெடுத்து வருகிறான் என்ற விஷயம் எனக்கு முன்னமே தெரியும். ஆனால், அதைச் சில காரணங்களுக்காக என் சகோதரனிடம் சொல்லாமல் இரகசியமாய் வைத்திருந்தேன். இது தெரிந்த போது நான் சகோதரத் துரோகமும் தேசத் துரோகமும் செய்து விட்டதாக இந்த நிர்மூடன் எண்ணினான். நான் உயிர் கொடுத்துக் காப்பாற்றி இவ்வளவு மேன்மைப் பதவிக்குக் கொண்டு வந்த என் சகோதரன் என்னைப் பார்த்து 'உயிரோடிருக்கும் வரையில் என் முகத்தில் விழிக்காதே' என்று சொல்லி அனுப்பினான். அதன் பலனாகத் தான் இப்போது இங்கே அநாதைப் பிரேதமாகக் கிடக்கிறான். நீயும் நானும் இவனை எடுத்துத் தகனம் செய்தாக வேண்டும்!'' என்று சொல்லி பிக்ஷு பெருமூச்சு விட்டார். மறுபடியும் கூறினார் : ''இதெல்லாம் அஜந்தா சங்கிராமத்துப் புத்த பிக்ஷுக்களுக்குத் தெரிந்தது. இத்தனை காலமும் என்னால் கிடைத்த உதவிகளையெல்லாம் பெற்று வந்தவர்கள், நான் சக்கரவர்த்தியின் கோபத்துக்கு ஆளானேன் என்று தெரிந்ததும் உடனே என்னைச் சபித்துப் புத்த சங்கத்திலிருந்து பிரஷ்டம் செய்தார்கள். அதன் பலனை அவர்களும் அநுபவிக்க நேர்ந்தது. ரஞ்சனி! நீலகேசியை எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும் தப்பிப் பிழைக்க முடியாது. அவர்களுடைய கதி அதோகதிதான்.''

''அஜந்தா பிக்ஷுக்களுக்கு அப்படி என்ன கதி நேர்ந்தது?'' என்று காபாலிகை கேட்டாள்.

''வேறொன்றும் இல்லை. அப்புறம் ஒரு வாரத்துக்கெல்லாம் அஜந்தா பிக்ஷுக்கள் சங்கிராமத்தை மூடிவிட்டு உயிர் தப்புவதற்கு ஓடும்படி நேர்ந்தது. நாடு நகரங்களில் எல்லாம் 'அஜந்தாக் கலை விழா, புத்த பிக்ஷுக்களின் சூழ்ச்சி; காஞ்சி மாமல்லனுக்கு ஒத்தாசையாக அவர்கள் செய்த வஞ்சகமான ஏற்பாடு' என்ற வதந்தி பரவியது. வதந்திக்கு விதை போட்டவன் நான்தான். ஜனங்கள் கோபங்கொண்டு அஜந்தாவுக்குத் திரண்டு போய்ச் சங்கிராமத்தையும் அங்குள்ள சிற்ப சித்திரங்களையும் அழித்துப் போடுவதற்கு ஆயத்தமாகி விட்டார்கள். இது தெரிந்ததும் பிக்ஷுக்கள் அஜந்தாவுக்குப் போகும் அந்தரங்க பகிரங்க வழிகள் எல்லாவற்றையும் மூடி மறைத்து விட்டு வடக்கே ஹர்ஷனுடைய ராஜ்யத்தை நோக்கி ஓட்டம் பிடித்தார்கள். அப்புறம் அஜந்தாவுக்குப் போக நானே பிரயத்தனம் செய்தேன். என்னாலேயே வழி கண்டு பிடிக்க முடியவில்லை. பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பி வந்து விட்டேன். நல்ல சமயத்திலேதான் வந்தேன்.



"திருட்டைக் கண்டுபிடிக்க வந்த மோப்ப நாய் நம்ம எஸ். ஐ. வீட்டுக்கே போயிடுச்சாமே...?"

"இதுக்குத்தான் எந்த பார்ட்டியையும் 'மாமூல் கொடுக்க வீட்டுக்கு வராதே'ன்னு சொல்றது...!"

- சீர்காழி வி. ரேவதி

ரஞ்சனி! எழுந்திரு! சீக்கிரம் நான் சொன்னபடி செய்! உடனே சிதை அடுக்கு! நெருப்பு கொண்டு வா!"

"சக்கரவர்த்தியைத் தகனம் செய்த பிறகு என்ன செய்யப் போகிறீர்கள்?"

"ரஞ்சனி! சக்கரவர்த்தியின் மரணத்தைப் பற்றியோ, தகனத்தைப் பற்றியோ யாரிடமும் பிரஸ்தாபிக்கக் கூடாது. காற்றிடம் கூடச் சொல்லக் கூடாது. இதைப் பரம ரகசியமாக வைத்திருக்க வேண்டும், தெரியுமா?"

"எதற்காக ரகசியம் அடிகளே?"

"எல்லாம் அப்புறம் சொல்லுகிறேன், ரஞ்சனி! இப்போது ஒரு கணமும் வீணாக்க நேரமில்லை."

"வஞ்சகப் பிக்ஷுவே! நீர் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை; காரணம் எனக்கே தெரியும்."

"உனக்கு என்ன தெரியும்?"

"இந்தப் பிரேதத்தைத் தகனம் செய்து விட்டு இரகசியச் சுரங்க வழியாக வாதாபி நகருக்குள் போகப் போகிறீர்! நீர்தான் சக்கரவர்த்தி என்று சொல்லிக் கொள்ளப் போகிறீர். சளுக்க சிம்மாசனத்தில் ஏறி அந்தக் காஞ்சி நகரத்து ரூபினியை உமக்கு அருகே உட்கார்த்தி வைத்துக் கொள்ளப் போகிறீர்....!"

நாகநந்தி கோபங்கொண்டு எழுந்து, "உன் வாக்குப்படியே செய்கிறேன். எப்படியாவது நீ தொலைந்து போ! இனிமேல் உன்னோடு...." என்று மேலும் சொல்வதற்குள் காபாலிகை அவர் காலில் விழுந்து, "அடிகளே! என்னை மன்னித்து விடுங்கள். நீர் சொல்வதைக் கேட்கிறேன்!" என்றாள்.

"உனக்குத்தான் என்னிடம் கொஞ்சம் கூட நம்பிக்கை இல்லையே? உன்னிடம் சொல்லி என்ன பிரயோஜனம்?"

"எனக்கு நம்பிக்கை உண்டாக்குவதற்கு ஒரு வழி இருக்கிறதே!"

"அது என்ன?"

"அந்த நடனப் பெண்ணை எனக்குக் கொடுத்து விடுங்கள்!"

"ரஞ்சனி! இத்தனை காலம் பொறுத்தாய். இன்னும் சில நாள் பொறுத்துக் கொள். இந்த வாதாபி முற்றுகை முடியும் வரையில் பொறுத்துக் கொள். சிவகாமியை ஒரு காரியத்துக்காகக் காப்பாற்றி வைத்திருக்கிறேன் என்று உன்னிடம் சொல்லி வந்தேனல்லவா? அந்தக் காரியம் இப்போது நெருங்கி வந்து விட்டது. மாமல்லன் மீது பழிவாங்கியதும் சிவகாமியை உனக்குத் தந்து விடுகிறேன். பிறகு இந்த நீலகேசிதான் தக்ஷிண தேசத்தின் சக்கரவர்த்தி! நீதான் சக்கரவர்த்தினி! சளுக்க-பல்லவ-சோழ-பாண்டிய-வேங்கி நாடுகள் எல்லாம் நம் இருவருடைய காலின் கீழே கிடக்கப் போகின்றன!" என்று நாகநந்தி என்கிற நீலகேசி கூறிய போது நிலவொளியிலே அவருடைய கண்கள் தீப்பிழம்பைப் போல் ஒளி வீசின.

காபாலிகை ஒருவாறு சமாதானம் அடைந்தவளாய்க் காணப்பட்டாள். நீலகேசியின் சொற்படி அவள் தன் குகைக்குச் சென்று அங்கிருந்து விறகுக் கட்டைகளைக் கொண்டு வந்து அடுக்கலானாள். அப்போது, நீலகேசியின் காதில் விழாதபடி அவள் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள் : "வஞ்சகப் பிக்ஷுவே! நீர் என்னை மறுபடியும் ஏமாற்றப் பார்க்கிறீர். ஆனால், உம்முடைய எண்ணம் ஒருநாளும் பலிக்கப் போவதில்லை. நீர் எவ்வளவுதான் காலில் விழுந்து கெஞ்சினாலும், தேவேந்திர பதவியே அளித்தாலும் அந்த ரூபினி சிவகாமி உம்மைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டாள். கடைசியாக என் காலிலே வந்துதான் நீர் விழுந்தாக வேண்டும்!"

(தொடரும்)

"ஏண்டி 'கழுதை'... எதிர் வீட்டுலே என்னடி பார்வை?"

"ஒண்ணுமில்லைம்மா... எதிர் வீட்டுப் பையனை அந்த மாமி 'குட்டிச் சுவர்'னு திட்டுறா!"

- சக்தி அபிநயா



# மலைவாழைக்கு மறுவாழ்வு...



● கொலுவிருக்கும் கோப்பைகள்...!

பழநியில தயாரிக்கப்படும் பஞ்சாமிர்தம், முன்பு போல் சுவையாகவும், அதிக நாள் கெடாமலும் இருப்பதில்லை என்ற அபிப்ராயம் பரவலாக இருக்கிறது. முன்பெல்லாம் பஞ்சாமிர்தம் தயாரிக்க மலை வாழைப் பழத்தை உபயோகித்து வந்தார்கள். இதில் சர்க்கரை சத்து அதிகமாக இருப்பதோடு, ஈரத் தன்மையும் குறைவு. இதனால் பஞ்சாமிர்தம் சுவையாகவும், அதே சமயத்தில் நீண்ட நாள் கெடாமலும் இருந்தது. இப்போது மலைவாழைப் பழம் கிடைக்காததால் பஞ்சாமிர்த சுவையும் மாறி விட்டது - என்று சொல்லப்படுகிறது.

மலைவாழைப் பழம் ஏன் கிடைப்பதில்லை? முடிக்கொத்து என்கிற நோய் மலைவாழைத் தோட்டங்களைத் தாக்கியதால், கோடைக்கானல் மற்றும் திண்டுக்கல் சிறுமலைப் பகுதியிலும் ஆயிரக்கணக்கான ஏக்கர்களில் மலைவாழைப் பயிர் நாசமாகியிருந்தது. அதனைப் பயிரிட்ட விவசாயிகள் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருந்தார்கள். ஒரு கட்டத்தில் விளைச்சல் அடியோடு நின்று போயிற்று. மலைவாழை பயிரிட்டு வந்த விவசாயிகளின் வாழ்வு இருண்டு விட்டது.

ஆனால் பட்டிவீரன் பட்டியைச் சேர்ந்த விவசாயி நடராசன், சோர்வடைந்து வீட்டில் உட்கார்ந்து விடவில்லை. பல விவசாய விஞ்ஞானிகளைச் சந்தித்தார். 'முடிக்கொத்து' நோயிலிருந்து மலை வாழையைக் காப்பது எப்படி என்று விசாரித்தார். கன்று நடுவதிலிருந்து குலையை அறுவடை செய்யும் வரை தீவிரமான பயிர் பாதுகாப்பு முறையை அனுசரித்து, தேவையான பூச்சி மருந்தைப் பயன்படுத்தினால், முடிக்கொத்து நோய், மலைவாழையைத் தாக்காது என்பதைப் புரிந்து கொண்டு செயலில் இறங்கினார், வெற்றி கண்டார்.

நடராசன் தான் வெற்றி யடைந்தது மட்டுமல்லாமல், அந்தப் பகுதி விவசாயிகளைச் சந்தித்து மலைவாழைக்கு மறுவாழ்வு கொடுக்கும் மகத்தான பணியில் அவர்களை ஈடுபடுத்தி வருகிறார். கீழப் பழநி, திண்டுக்கல் சிறுமலைப் பகுதியில் மீண்டும் மலைவாழைத் தோட்டங்கள் தோன்றியுள்ளன.

நோய் தாக்காத கன்றுகளை நட வேண்டும் என்பதற்காக, கொல்லிமலை, கல்ராயன் மலை ஆகிய பகுதிகளில் அலைந்து நோய் தாக்காத கன்றுகளை வாங்கி வந்து ஆயிரக்கணக்கில் விவசாயிகளுக்கு விநியோகித்திருக்கிறார் நடராசன். ''விஞ்ஞானிகளின் முயற்சியில் மறுவாழ்வு பெற்றிருக்கும் மலைவாழை, விவசாயிகளின் ஒத்துழையாமையால், மீண்டும் அழிந்து போகக் கூடாதே'' என்று படபடக்கிறார் நடராசன்.

பட்டிவீரன் பட்டியில் 'தமிழகம்' நடராசன் என்று சொன்னால்தான் டக்கென்று புரிந்து கொள்வார்கள். 'தமிழகம்' என்பது நடராசன் வீட்டிற்குப் பெயர். சாதாரண மேற்பார்வையாளராகப் பண்ணைகளில் வேலை செய்து வந்த இவர், விடா முயற்சியாலும், கடுமையான உழைப்பாலும்,



● காப்பி விளைச்சலில் சாதனை!

இன்று ஒரு பெரிய பண்ணைக்குச் சொந்தக்காரராகியிருக்கிறார்.

மலைவாழை மட்டுமல்ல. காப்பி, ஆரஞ்சு, சௌசௌ, அவ்வரி, மிளகு ஆகிய மலைப் பயிர்கள் இவர் தோட்டத்தில் விளைகின்றன. எட்டாவது வரைதான் படித்திருக்கிறார் என்றாலும், காப்பி வாரியம், வேளாண்மை பல்கலைக் கழகம் போன்ற விவசாய நிறுவனங்களின் யுக்திகளையும், ஆலோசனைகளையும் பின்பற்றுகிறார். திருத்திய, நவீன விவசாய முறைகளைப் புகுத்தி காப்பி விளைச்சலில் தொடர்ந்து சாதனை புரிந்து கொண்டிருக்கிறார்.

தோட்டக் கலை கண்காட்சி, தமிழகத்தில் எங்கே நடந்தாலும் அங்கே, தமது தோட்டத்தில் விளைந்த மலைவாழை, செவ்வாழை, ஆரஞ்சு ஆகியவற்றைப் பார்வைக்கு வைத்துப் பரிசுகளைத் தட்டி வருகிறார் நடராசன். அவர் வீட்டிலுள்ள பரிசுக் கோப்பைகளின் அணிவகுப்பு பிரமிக்கச் செய்கிறது.

நடராசனின் பண்ணை இன்று பலராலும் பாராட்டப்படுகிறது. வானொலி, தொலைக்காட்சி நிலையங்கள், நடராசனைப் பல முறை பேட்டி கண்டிருக்கின்றன. 76 வயதாகும் நடராசன் இப்போதும், தினசரி 35 கி. மீ. மலைப் பகுதியில் பயணம் செய்து பயிர்களைக் கண்காணித்து வருகிறார்

''நிலப் பகுதியில் விவசாயம் செய்வதற்கும், மலைப் பகுதியில் செய்வதற்கும் நிறைய வித்தியாசம் உண்டு. ஆனால் அந்த அடிப்படையிலான எங்கள் கோரிக்கைகளை அரசு கண்டுகொள்ள மாட்டேன் என்கிறது'' என்று வருத்தப்படுகிறார், தமிழக காப்பி விவசாயிகள் சங்கத் தலைவராகவும் இருக்கும் நடராசன். குறிப்பாக காப்பி வாரியத்தைக் கடுமையாகக் கண்டிக்கிறார் இவர்.

''கொள்முதல் செய்த காப்பிக்கு எங்களுக்கு நல்ல விலை கிடைப்பதில்லையென்பதோடு உரிய பணத்தைக் கொடுக்க இரண்டு மூன்று ஆண்டுகள் ஆகின்றன.

அதற்கும் நிறைய அலைய வேண்டும். சிறு விவசாயிகளால் இந்தத் தாமதத்தைத் தாங்க முடியாது. விவசாயிகளிடமிருந்து கட்டாயக் கொள்முதல் செய்வதைக் காப்பி வாரியம் கைவிட வேண்டும். ஏலக்காய், மிளகு பயிரிடும் விவசாயிகள் அவற்றை ஏலம் விட்டுச் சம்பாதித்துக் கொள்வதைப் போல, காப்பி பயிரிடும் விவசாயிகளையும் அனுமதிக்க வேண்டும்'' என்று கூறும் நடராசன் விவசாயிகளைப் பாதிக்கும் பிரச்னைகள் குறித்து அவ்வப்போது முதலமைச்சருக்கும் சம்பந்தப்பட்ட மற்றவர்களுக்கும் எழுதித் தெரிவித்துக் கொண்டே இருக்கிறார்.

● ஆரஞ்சு குவியல்!



''உங்கள் சாதனைகளுக்குக் காரணம் என்ன?'' என்று கேட்டால், ''உழைப்பே கடவுள்'' என்கிற தமது நம்பிக்கையைச் சொல்லும் நடராசன், மனைவி சரஸ்வதியையும் மறக்காமல் குறிப்பிடுகிறார்.

- ஸ்ரீநிவாசன்



விலை குறைவாக
இருந்தால் மட்டும்
போதுமா?
"போதாது. தாயாகவும்
டாக்டராகவும் இரு
பதால் நான் கட்டா
மாகக் கூறுவேன்
தாய்ப் பாசத்தையும்
அதன் சந்தோஷ
தையும் விலை
என்னும் தராசி
நிறுக்கவே முடியாது
ஒரு தாயி
சந்தோஷ
தனது கு
ந்தைக்கு அனை
திலும் உன்ன
மானதை அளி
பதில்தா
அடங்கி
இருக்கிறது
உன்னத
என்றால்
விப்ரோ பே
ஸாஃப்ட்
சோப். இதி
குழந்தையின்
தளிர் மேனிக்கு
அவசியமான
பி.எச். பேலன்
சரியான அளவி
உள்ளது. சருமத்திற்கு
கேடு ஏற்படுத்தும் உ
பொருளே கிடையாது
சருமத்தை மென்
யாக வைக்கு
லனோலினும் உள்ளது
இத்தனை சிறப்புக
இருந்தும் விலை
6 ரூபாய் குறை
இனியும் அதி
விலை கொடுத்து
இதர சோப்புகளை
வாங்குவீர்களா?
ரூ 13/-
75 கிராம்
எல்லா
வரிகளும்
உட்பட
WIPRO
BABY SOFT
SOAP
குழந்தைக்கு தூய்மையான
உங்களுக்கு சிக்கனமான
everest/92/WL/234-Tm

# பெரிய தம்பி

## காட்சி – 20

(பண்ணை வீடு)

பழமொழி தாத்தா : எல்லாரும் எங்கடா போயிட்டீங்க? என் பேரன் இன்னிக்கு வரப் போறான். வந்து இந்த மணியை அடிக்கப் போறான்.

பண்ணை : ஏய் பெரிசு! சும்மா இருக்க மாட்டே? ஒருநாள் இல்ல ஒருநாள் இந்த மணியே உன் தலையில விழப் போவுது.

தாத்தா : மணியடிச்சா மாடு கத்துதாம். கோழி அடிச்சா குருமா கொதிக்குதாங்கிற கதையா....

பெரிய (வாத்தியார் வேஷத்தைக் கலைத்து விட்டு வருகிறான்) : தாத்தா, பழமொழி சொல்லாதே. நானே வந்துட்டேன். ஆத்தா! அப்பா! நான் வந்துட்டேன். உங்க புள்ள பெரியதம்பி வந்துட்டேன்....

கருப்பாயி : மவனே! இத்தினி நாள் எங்கடா போயிருந்தே?

பெரிய : மிலிட்ரில சேர்ந்துட்டேம்மா! துப்பாக்கி கூட குடுத்திருக்காங்க பாரு!

பண்ணை : எவ்ளோ காலமாச்சுடா பாத்து?

பெரிய : கரெக்ட்.... இதை யாரும் சமீபத்துல பார்த்திருக்க முடியாது... இது பகத்சிங் வச்சிருந்த ரிவால்வர்!...

கருப்பாயி : இங்கிலீசெல்லாம் பேசறியேடா! புரியலியே!

பெரிய : உங்களுக்குப் புரிஞ்சா அத நான் ஏன் பேசப் போறேன்!

தாத்தா : லீவு குடுத்தாங்களாப்பா?

பெரிய : ராணுவத்துல சீக்கிரம் லீவு குடுப்பாங்களா? குடுக்கல்லை... கார்ப்போரல்கிட்ட போய்க் கேட்டேன்...

தாத்தா : கார்ப்போரல்லா...?

கருப்பாயி : கார்ப்பொரல்னா தாத்தா, ஒருவிதமான உரல்!...

பெரிய : உரலுமில்ல, உலக்கையுமில்ல; அவர் நம்ம ஊர் தாசில்தார் மாதிரி! அவர் சொன்னாரு.. பாகிஸ்தான் எல்லையில நிக்கற ஒரு டாங்கியைப் புடிக்கக் கொண்டா... அப்பத்தான் லீவுன்னுட்டாரு! சரின்னு ஒரு பாகிஸ்தான் டாங்கியைக் கொண்டு போய் புடிங்கடான்னேன்! உடனே லீவு குடுத்துட்டாங்க!

பண்ணை : அதெப்படி நீ ஒருத்தனா பாகிஸ்தான் டாங்கியைப் பிடிக்க முடிஞ்சது?

பெரிய : ரொம்ப ஈஸி! எங்கிட்ட சொன்ன மாதிரியே பாகிஸ்தான் ஆபீசரு ஒரு சிப்பாய்ட்ட சொல்லி இருக்கான். இந்திய டாங்க் ஒன்னு கொண்டு வா, லீவு தரேன்னு! ரெண்டு பேரும் திட்டம் போட்டு டாங்குகளை மாத்திக்கிட்டோம். வாழ்க அப்துல் மஜீத்...!

மாடசாமி (ஓடி வருகிறான்) : அநியாயம்! அக்கிரமம்!

பண்ணை : என்ன? என்ன?

மாடசாமி : வாத்தியார் பூவரசன் பரிசல்ல வர்றப்போ பரிசல் கவுந்து ஆள் இறந்துட்டாரு!... பெரியதம்பி!...



* ''என் பேரன் இன்னிக்கு வரப் போறான்....''

பெரிய : நம்ம ஊர் வாத்தியார் ஏரில முழுகிச் செத்துட்டாரா?

வீணா : பாடி கிடக்குதா?

பெரிய : எங்க ஊர் ஏரி ரொம்ப ஆழம்... பெரியபட்டியின் பசிபிக்னு சரித்திர புத்தகத்துல வருமே அது இந்த ஏரிதான்... வாத்தியார் அவுட்டா? ஸ்கூலுக்கு லீவு விட்டுடுங்க...

வீணா : ஓஹோ! என் புருசன் பூவரசன் செத்துட்டாரா?... கொஞ்சம் இரு... திருகாணி!..

திருகாணி : என்னக்கா?

பெரிய : அக்காவா? என்னங்கடீ ஓட்டீங்க?... யாரு இந்த அம்மா?

வீணா : வெயிட் திருகாணி..! காலையல ஏரிக்கரைல பூ பறிச்சிட்டு இருந்தப்போ நீ பாத்ததை இங்க சொல்லு!...

திருகாணி : நான் பூ பறிச்சுட்டு இருந்தேன்...

பெரிய : ஏன் பறிக்கற? ஒரு கிளையை எடுத்துத் தலைல செருகிக்க வேண்டியது தானே!

திருகாணி : அப்போ தூரத்துல என் மாமா பெரியதம்பி ராணுவ உடுப்புல பரிசல்ல வந்துட்டு இருந்தாரு!... உடனே இன்னொரு பரிசல்ல வந்த வாத்யாரு, பெரிய தம்பியைப் புடிச்சு ஏரிக்குள்ளே தள்ளி வுட்டுட்டாரு!....

பெரிய : பொய்! கட்டுக்கதை!...

திருகாணி : பெரியதம்பி என்னைக் காப்பாத்துங்க காப்பாத்துங்கன்னு கத்தினாரு! அப்புறம் தண்ணிக்குள்ள முழுகிட்டாரு. உடனே இந்த வாத்யாரு பெரிய தம்பியோட பையி, துப்பாக்கி எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு இங்க வந்துட்டாரு!...

பெரிய : ஏய்...! பொய் சொன்னே... பேத்துடுவேன்!

திருகாணி : நீ மாமாவா இருந்தா இப்படி பேசுவியா? நீ பூவரசு! வாத்யாரு! என் மாமாவைக் கொன்ன கொலைகாரன்!

கருப்பாயி : அடப்பாவி! வெல்லக் கவுண்டரா முனியாண்டியைக் கொன்னே... இப்ப பூவரசா என் மவனைக் கொன்னுட்டியேடா.

பெரிய : ஆத்தா!

கருப்பாயி : நிறுத்துல! நீ என் மவனைக் கொன்ன படுபாவி!

பெரிய : நான்தான் ஒன் மவன் பெரிய தம்பிதான் ஆத்தா!

வீணா : அப்ப உங்ககிட்டே கவுண்டர் பெல்டு எப்படி வந்துச்சு!...

பண்ணை : வாத்யார்தான் இதைப் போட்டுட்டுத் திரிஞ்சாரு! கொலை செஞ்சாலும் புத்திசாலித்தனமா செய்யணும்!...

# எஸ்.வி.சேகர்

வசனம்: வெங்கட்



● "யார் இந்த அம்மா...?"

பெரிய : இது மாதிரி ஒரு பெல்ட்தான் இருக்குமா? இது பாகிஸ்தான் சிப்பாய் கொடுத்த பெல்ட்.

பண்ணை : நம்ப முடியலை!...

கருப்பாயி : நீ என் மவன் இல்ல!

திருகாணி : நீ மாமா இல்ல...

பெரிய : தாத்தா நீயாவது சொல்லேன்.

தாத்தா : ஓடம் ஒழுகுதேன்னு ஓடக்காரன் கவலைப்பட்டானாம். குடக்கம்பி எங்கடான்னு குருவிக்காரன் கேட்ட கதையா...

பெரிய : பெரிசு! என்னை மிருகமாக்கிடாதே.

வீணா : பெரியதம்பியைக் கொன்னுட்டு அவர் சொத்துக்கு ஆசைப்பட்டு இங்கே வந்திருக்கீங்களே!... வெக்கமா இல்ல!... இப்பவே பட்டணம் போய் போலீசைக் கூட்டிட்டு வர்றேன்!

பெரிய : ஐயையோ...

(ஓடுகிறான்....!)

பண்ணை : வாத்யான் தப்பிச்சு ஓடிட்டான்... கிளைமாக்ஸ் நெருங்கிடுச்சு... இன்னும் ஏன் உக்காந்திருக்காங்க கிராமத்து சனங்க... அத்தனை பேரையும் கிளப்பிட்டு, கம்போட ஓடச் சொல்லு!

## காட்சி - 21

(ஊர் எல்லை)

மாடசாமி : ஏன்யா, அந்தப் பையில அடைச்சுட்டு வர வேற பொருளே கிடைக்கலியா? பெல்டையும் வேட்டி சட்டையையும் எடுத்திட்டு வந்தீங்களே! அந்த பொம்பள வீணா என்னடான்னா நீ பெரிய

பச்சைப் பசேலென்ற இலைகள் மனத்திற்கு இதம் தருகின்றன. மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு நிறப் பூக்கள் மனம் தளர்ந்தவர்களுக்கு மருந்தாக விளங்குகின்றன. வெள்ளை மற்றும் ஊதா நிறப் பூக்கள் மனத்திற்கு அமைதியைத் தருகின்றன விவசாயத் துறைத் தலைவரான டாக்டர் ஏன்தவ 'தோட்டங்கள்' நோயாளிகளுக்கு வாழ வைக்கமளிப்பதைக் கண்டுபிடித்திருக்கிறார்.
நன்றி : தமிழ்த்து ; தகவல் : இந்திரா

தம்பியைக் கொன்னுட்டதாச் சொல்லி போலீஸுக்குப் போய்க் கிட்டு இருக்கிறா!

*பெரிய :* போகட்டும்!... நான் தானே இரட்டை வேஷம் போட்டேன்! உண்மையில யாரும் சாகவியே! சிறைச்சாலை என்ன செய்யும்?

*மாடசாமி :* ம்... மணி அடிக்கும்... முட்டி பேர்க்கும்... ரெண்டுமே நீதான்னு போலீஸ் நம்பலைன்னா?

*பெரிய :* பெரியதம்பியோட பொணத்தைக் கொண்டு வாங்கம்பேனே!...

*மாடசாமி :* கொண்டு வந்து போட்ருவாங்க போல இருக்கேயா!...

*பெரிய :* எ ன் ன ய் ய ா சொல்றே?

*மாடசாமி :* உன் போதாத நேரம்... இப்போன்னு பார்த்து ஏரிக்கரையில ஒரு பொணம் ஒதுங்கியிருக்கு...

*பெரிய :* எ ன் ன ய் ய ா சொல்றே?

*மாடசாமி :* அந்த செத்துப் போன பொணம்... அந்த செத்துப் போன பொணம்...

*பெரிய :* செத்தால்தான்யா பொணம்.... மேல சொல்லு.

*மாடசாமி :* பொணம் நல்லா அழுகிப் போச்சா, அதனால அது பெரிய தம்பின்னு களுவா நம்பிடுவாங்க!

*பெரிய :* ஐயையோ மாட்டிக் கிட்டேனே!...

*மாடசாமி :* தப்பிக்கணும்னா ஒரே ஒரு வழிதான் இருக்கு!

*பெரிய :* இப்படியே ஓடிப் போயிட வாம்ங்கறியா?

*மாடசாமி :* இல்ல... பெரிய தம்பி, வாத்யாரு ரெண்டு பேரையும் ஒரே நேரத்துல காட்னா விட்டுடுவாங்க!...

*பெரிய :* மாடசாமி! தெருப்புழுதியே தேவலைன்ற மாதிரி பேசாதே. பல்ல பிடிக்க ஆந்திரா போய் விட்டலாச்சாரிகிட்ட ஐடியா கேக்கணும்....

*மாடசாமி :* எத்தனை வருஷம் கம்பி எண்ணப் போறீங்களோ!

*பெரிய :* டேய்! நீ பார்க்கிறது கிளைமாக்ஸ் வீடுதான். நிஜ கிளைமாக்ஸ் இனிமேல்தான் வரும். ஒரு ஐடியா பண்றேன்! டேய் தெருப்புழுதி....!

*தெருப்புழுதி (அங்கு வந்த படி) :* ஏன் சார்?

*பெரிய :* எங்கே போறே?

*தெருப்புழுதி :* கடைக்குப் போறேன்.

*பெரிய :* என்ன வாங்க?

*தெருப்புழுதி :* பல்லி முட்டாய் வாங்க!

*பெரிய :* நீ என்ன பண்ற... செட்டியார் கடைக்குப் போற... அங்க போய் இந்தக் காசைக் குடுத்து இருமல் சூர்ணம் வாங்கிட்டு வரே...

*தெருப்புழுதி :* யாருக்கு இருமல்?

*பெரிய :* உங்க தாத்தாவுக்கு!... போடா

## காட்சி - 22

*(மேடையின் ஒரு பகுதியில் மட்டும் ஒளி சிந்த, அங்கே மாடசாமியும் பெரிய தம்பியும்...)*

*மாடசாமி :* இந்த சூர்ணம் விஷயம் என் தலையைக் குடையுது! விளக்கமாச் சொல்லுங்க.

*பெரிய :* வீணாகிட்ட யாராவது தற்கொலை பண்ணிட்டுச் சாகப் போறேன்னு பயமுறுத்தினா போதும்... அவ பயந்துடுவா. நான் இருமல் சூர்ணத்தைச் சாப்டுகிட்டே வீணாகிட்ட விஷத்தைச் சாப்பிடற மாதிரி நடிப்பேன்!..

வீணா... என் மேல நீ வச்சிருக்கற பாசம் நிஜம்னா போலீசுக்குப் போகாதேம்பேன்...

*மாடசாமி :* ஆ... அப்புறம்?

*பெரிய :* அவளுக்கு இளகின மனசு!...

*தெருப்புழுதி (வருகிறான்) :* இந்தாங்க சூர்ணம்.

*பெரிய :* பார்த்தா இருமல் சூர்ணம் மாதிரி தெரியலியே? இப்படி நாறுதே. புலி மார்க் இருமல் சூர்ணம்னு கேட்டு வாங்கினியாடா? அவுங்களே விளம்பரத்துல சொல்றாங்க ''இருமல் சூர்ணம் என்று கேட்காதீர்கள், புலிமார்க் இருமல் சூர்ணம் என்று கேட்டு வாங்குங்கள்'' அப்படின்னு!

*தெருப்புழுதி :* இது இருமல் சூர்ணம் தாங்க! எனக்குத் தெரியாதா? *(போகிறான்)*

*மாடசாமி :* உங்க கதாநாயகி வருது. சூர்ணத்தை முழுங்குங்க. ஆக்ட் குடுங்க.

*பெரிய :* ஆ!... விஷம் தற்கொலை.

## காட்சி - 22

*(மேடையின் ஒரு பகுதியில் மட்டும் ஒளி. பெரிய பண்ணையும் தெருப்புழுதியும்...)*

*பண்ணை :* என்னடா எலிபாஷாணம் இது! எலிங்களும் மாங்க மாங்க துன்னு துங்க. துன்னுட்டு செத்தாலும் சந்தோஷப் படலாம்... இன்னும் கொண்டாணு வாயைத் தொறந்து கேக்காத குறைதான்... சேதி எப்படி பரவிச்சோ? ஊர்ல இருக்கற எலி பூரா என் வீட்டுல!

*தெருப்புழுதி :* ஐயையோ! இருமல் மருந்தும், எலி பாஷாணமும் மாறிப் போச்சுன்னு நினைக்கிறேன்.

*பண்ணை :* அடப்பாவி... என்னடா சொல்ற?

*(தொடரும்)*

படங்கள் : யோகா

# புதுமைத் திட்டம் நெ.2

பொதுமக்களின் அமோக ஆதரவாலும் பெரும்பாலோர் இத்திட்டத்தில் பங்கு பெற விரும்புவதாலும் மிகக்குறுகிய காலத்திற்கு நீட்டிக்கப்பட்டுள்ளது.

**லில்லி உள்பாவாடைகள் தயாரிக்கும் கரூர் PRC சார்மெண்ட்ஸ்ஸாரின்**

தொடர்ந்து 5 ஆண்டுகளுக்குப் பயன்தரும்.

# புதுமைத் திட்டம் நெ.2

நீங்கள் செய்ய வேண்டியது இதுதான்.

- ரூ.200/-ஐ DD அல்லது M.O. மூலம் PRC கார்மெண்ட்ஸ் என்ற எங்கள் நிறுவனத்திற்கு செலுத்துங்கள்.
- நீங்கள் செலுத்திய ரூ.200/-ஐ $5^1/_2$ ஆண்டுகளுக்குப் பிறகு திரும்பப் பெற்றுக் கொள்ளும் வகையில் "கரூர் கிளை 'கரூர் வைஸ்யா பாங்க்'-ன் "காயத்ரி கேஷ் சர்டிபிகேட்" (GCC) ஒன்றை உடனடியாக உங்கள் பெயருக்கு நீங்கள் பெற்றுக் கொள்கிறீர்கள். இதனால் நீங்கள் பெறுவது உங்கள் தொகைக்கு முழு பாதுகாப்பு.
- நீங்கள் பணம் செலுத்திய தேதியிலிருந்து ஓராண்டு கழித்து 5 ஆண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டின் முடிவிலும் ரூ.84/- மதிப்புள்ள இரண்டு லில்லி பாவாடைகள் உங்களுக்கு எங்களது செலவிலேயே அனுப்பப்படும்.
- 5ம் ஆண்டின் முடிவில் எங்களது பரிசாக ரூ.100/-ம் வழங்கப்படும்.
- இப்பொழுது பாருங்கள் நீங்கள் செலுத்திய ரூ.200/- $5^1/_2$ ஆண்டுகளில் ரூ.720/- மதிப்புடையனவாக உங்களுக்கு முற்றிலும் பயன்தரத் தக்கவையாக மாறியுள்ளதை.

பங்கு கொள்வீர்! பயன்பெறுவீர்

பணம் அனுப்ப வேண்டிய முகவரி

## PRC கார்மெண்ட்ஸ்

**26, பிரதட்சணம் ரோடு, A-பிளாட்,**

**கரூர்-639 002, ஃபோன் 21946**

இது "பாரதப் பிரதமரின்" படித்த இளைஞர்களுக்கான சுயவேலைவாய்ப்புத் திட்டத்தின் கீழ் 1984 முதல் கரூர் கிளை கனரா வங்கியின் பொருளாதார உதவியுடன் சிறப்பாகச் செயல்பட்டு வரும் ஒரு நிறுவனமாகும்.

குறிப்பு: 1 நீங்கள் பணம் செலுத்தும் பொழுது உங்கள் சரியான முகவரியும் போஸ்டல் கோட் எண்ணையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

2. ஸ்பெஷல் சைஸ் (ஃப்ரீ சைஸ்) வேண்டுவோர் அதற்குண்டான விலை வித்தியாசத்தை பின்னர் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

3. உங்களுக்கு உடனடியாக இரண்டு லில்லி பாவாடைகள் தேவை யென்றால் Normal சைஸ"க்கு ரூ.84/- அல்லது ஸ்பெஷல் சைஸ"க்கு ரூ.100/- செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

4. "இரட்டைப் பயன்தரும் திட்டம் "Scheme No:1 தற்பொழுதும் நடைமுறையில் உள்ளது.

மன்றிட்டின் மீது கோணி விரித்துக் குந்தியிருந்தார் குமரேசன். நொடிக்கொரு தடவை தன்னுடைய நரைத்த மீசையை முறுக்கிக் கொண்டவர், கூடி இருந்தவர்களைச் சிந்தனையோடு பார்த்தார்!

''அவசரப்பட்டு ஆளாளுக்கு ஆயுதம் தூக்கறதுலே அர்த்தமில்லே! எடத்தை விலை குடுத்துக் கெரயம் பண்ணிக்கிட்டாரு மேட்டூர்க்காரர்! கொஞ்சம் நீக்கு போக்காப் போயிருந்தா நெலமையைச் சமாளிச்சிருக்கலாம்! அவனவன் நெப்பு நிதானம் தெரியாமப் பேசிப்புட்டிங்க! மேட்டூர்க்காரரு செல்வாக்கான ஆளு! அதனால.....''

கட்சிக் கலர் பனியன் போட்டுக் கொண்டிருந்த தாட்டியான ஓர் இளைஞன் எழுந்து நின்றான்!

''பெரிசு! மேட்டூர்க்காரர் பக்கம் நாயம் பேசறது சரி இல்லே! ஏதோ நம்ம சனம் தப்பு பண்ணிட்ட மாதிரியில்ல சொல்றீக!''

''அப்படிச் சொல்லுங்கண்ணே!'' என்று ஒத்து ஊதினான் நாட்ராயன்.

குமரேசனின் கண்கள் சிவப்பேறின! முறுக்கிய மீசை முனையில் துடித்தது. ஆனால் வயதும், பொறுப்பும், அனுபவமும் அவர் உணர்ச்சிகளுக்கு அணைபோட, நீர் பட்ட பாலாய் அமிழ்ந்து போனார்! நெடுநெடும் பார்வையைச் சிதறவிட்டார்!

''கோவணம் கட்டத்தெரியாத பசங்க எல்லாம் குதிக்கற அளவுக்கு நம்ப பஞ்சக்குடி கிராமத்துக்கு எந்தக் கோராமையும் வந்துடலே! வில்லங்கத்தை வெலாவாரியா அலசுனா எல்லாம் விடிஞ்சு போயிடும்! பட்டணத்துக்குப் போயி அங்கியே நெரந்தரமாத் தங்கிட்ட நம்ம ஊரு கண்ணுப் பையனோட நிலத்தை மேட்டூர்க்காரரு முனியப்பர் கிரயம் பண்ணிக்கிட்டாரு! நாம

# மனிதச் சங்கிலி

ஜெரா





"நார்மல் டெலிவரி ஆகக் கூடியதைக் கூட உங்க டாக்டர் சிசேரியன் தான்னு சொல்லிடறாராமே, ஏன்?"

"ரொம்ப வருஷத்துக்கு முன்னாலே அவர் ஒரு பிளாட் வாங்கிப் போட்டிருந்தார்... இப்போ அதுலே வீடு கட்டப்போறதாப் பேச்சு அடிபடுது...!"

- அ. தெய்வசிகாமணி



"வரவர யார்யார்கிட்டதான் கடன் சொல்றதுன்னு ஒரு விவஸ்தையே இல்லாமல் போயிடுச்சு போங்க."

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"மொய் வசூல் பண்றவர்கிட்ட போய் ஒருத்தர், 'பத்து ரூபா எழுதிக்கங்க... ரெண்டு நாள்ல தர்றேன்'னு சொல்றாரே!"

- சீர்காழி வி. ரேவதி.

அத்தனை பேரும் இத்தனை நாள் அந்த நிலத்துல இருக்கற கிணத்துலதான் தண்ணி எடுத்துக்கிட்டு இருந்தோம்! ஆனா மேட்டூர்க்காரர் வாங்கின நிலத்துல ஏதோ மாவு மில்லு கட்டறதுக்கு ஏற்பாடு பண்ணிக்கிட்டு இருக்காரு! இந்த ஊரோட தண்ணி பிரச்னையை ஓரளவுக்குத் தீத்து வைக்கிற அந்தக் கிணத்தையும் சேத்து, சுத்திலும் சுவர் வச்சிக்கிட்டு இருக்காரு! நாம் நம்ம கஷ்டத்தை மேட்டூர்க்காரர் கிட்டே நயமாச் சொல்லி இருந்தா நிச்சயமா அவரு நல்லது பண்ணி இருப்பாரு! அதுக்குள்ளே எந்த வெடலைப் பசங்க அவருகிட்டே வெவகாரம் பண்ணாங்களோ தெரியல..... இப்ப கெணத்தை வுட்டுக் குடுக்க மாட்டேன்னு கறாரா நிக்கிறாரு! அவரு கட்டின சுவத்தை இடிக்கறதுக்கு இப்ப நாம அத்தனை பேரும் ஆயுதங்களோட வந்திருக்கோம்... இதோ.. நான் கூட கொண்டு வந்திருக்கேன்!..."

குமரேசன் பக்கவாட்டிலிருந்து, எடுத்துக் காட்டிய கடப்பாரைக் கம்பியைப் பார்த்ததும் 'கலர் பனியனோடு, நின்றிருந்த வேறு சில இளைஞர்களும் சேர்ந்து கொள்ள, அங்கு ஒரு சின்னஞ்சிறு 'கலாட்டா' மையம் கொண்டது.

கூட்டத்திலிருந்த ஓரிரு பெரியவர்கள் எழுந்து சலசலப்பை அடக்கி விட்டு "இனிமே நடக்க வேண்டியதைச் சொல்லிப்புடு பெரிசு" என்று அனுமதி வழங்கியபின்தான் குமரேசனுக்கு நிம்மதி பூத்தது. அடுத்து அவர் பேசுவதற்கு ஆயத்தமாவதற்கு முன்பு, "படபடவென்று புகை பரப்பியபடி மரத்தடியில் வந்து நின்றது மோட்டார் சைக்கிள்!"

கலர் பனியன் கூட்டம் "அண்ணன் வந்தாச்சு" என்று கசகசவென்று பேசியபடி மோட்டார் சைக்கிளைச் சூழ்ந்து கொண்டது. சிலர் எந்தப் பக்கமும் ஒட்டாமல் நடுவில் நின்றபடி 'பேய் முழி' முழித்துக் கொண்டிருக்க, குமரேசன் பக்கத்தில் 'கடப்பாரைக் கம்பி' மட்டுமே தனியாக விழுந்து கிடந்தது.

மோட்டார் சைக்கிளை ஓட்டிக் கொண்டு வந்த புஷ்டியான இளைஞனை, கூட்டத்தை விலக்கி, குமரேசன் பக்கத்தில் கூட்டிக் கொண்டுவந்தான் நாட்ராயன். இளைஞன் பெரியவருக்கு இருகரம் குவித்தான். எங்கிருந்தோ ஒரு மடக்கு நாற்காலி வந்தது! யாரோ மேல் துண்டால் தூசி தட்டினர்! இளைஞன் அமர்ந்து கொள்ள நாட்ராயன் நடுநாயகமாக நின்று கொண்டு உணர்ச்சி பொங்கக் கூவினான்!

"அண்ணன் நம்ம நாயத்துக்காகப் போராடறதா வாக்கு குடுத்துட்டாரு! நான் கூட கேட்டேன்... என்ன அண்ணே! மேட்டூர்க்காரரும் உங்க கட்சி ஆளுதானே! அதுலயும் மாவட்டத் தலைவரு வேற! அவரை எதுத்து, எங்களுக்காக நீங்க எப்பிடின்னு..." என்ற நாட்ராயன் உணர்ச்சிக் கொந்தளிப்பில் கண்கள் ஈரமாக, மேல் துண்டால் முகம் ஒற்றிக் கொண்டு தொடர்ந்தான் : "அதுக்காக அண்ணன் என்னை மன்னிக்கணும்னு கேட்டுக்கறேன்! 'யாரா இருந்தாலும், நியாயத்துக்காகப் போராடும் போது சொந்தத் தாயா இருந்தாலும் என் நெனைப்பு மாறாது'ன்னு ஆணி அடிச்ச மாதிரி அண்ணன் சொன்னதை இப்ப நினைச்சாக் கூட எனக்கு உடம்பு சிலிர்க்குது. அதனால நம்ம பிரச்னையை அண்ணன் கிட்டே விட்டுடலாம்ங்கறது என்னோட யோசனை... நீங்க எல்லாம் என்ன சொல்றீங்க!"

கூட்டம் கொஞ்சநேரம் மௌனம் சாதித்தது.. சிலர் குமரேசனைப் பார்த்தனர்! இளைஞர் கூட்டம் "அண்ணன் வாழ்க!" என்று கோஷம் போட்டது.

"என்ன பெரிசு! என்ன சொல்றே?"

"இருலே!... தம்பி என்ன சொல்றாரு... பாப்பம்...."

இளைஞன் எழுந்தான். தொண்டையைச் செருமிக் கொண்டான்!

### தெரிந்து கொள்ளுங்கள்

# உங்கள் குழந்தையின் மேனிபற்றி

**மலர்** என்பார் இறகு என்பார் மழலைச் செல்வத்தை. அதன் மேனி மலரினும் மென்மை. இறகிலும் மிருது. ஆகவேதான் அதற்குத் தேவை உங்கள் சிறப்பான கவனிப்பு.

மென்மையான ஆடைகள், இதமான ஸ்பரிசம். அத்துடன் சிறப்பான சோப்பு-ஜான்ஸன்ஸ் பேபி சோப்.

ஆரம்பத்தில் சில வாரங்களுக்கு குழந்தையின் சருமத்தில் சில மாற்றங்கள் ஏற்படும். அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். அது இயல்பான மாற்றம் ஆகும். சிறிது சிறிதாக மறைந்துவிடும்.

**சருமத்தில் பூனை முடி:** ஆரம்பத்தில் குழந்தையின் உடல் முழுதும் பூனை முடி போன்ற உரோமம் இருக்கும். அது இரண்டு வாரங்களுக்குள் தானாக உதிர்ந்துவிடும்.

**சினைப்பு மற்றும் கரப்பான்கள்:** இவை குழந்தையின் உடல் அமைப்பு (சிஸ்டம்) முழுதும் செயல்படத் துவங்காததால், அவை சிலநாட்களில் பொதுவாக மறைந்துவிடும்.

**பிறப்புப் புள்ளிகள்:** பிறக்கும்போது குழந்தையின் மேனியில் நீல சிவப்பு அல்லது பழுப்பு நிறத்தில் சில புள்ளிக்குறிகள் ஏற்படுகின்றன. சில மாதங்களில் அவை மறைந்துவிடுகின்றன. குழந்தை வளரும்போது சில புள்ளிகள் காணப்படலாம்.

**தலையின் கவர்:** இளஞ்சிவப்பு நிறத்தில் குழந்தையின் தலை உச்சியில் காணப்படும் பத்தை போன்ற கரப்பான் ஆகும். அது சில சமயங்களில், குழந்தையின் முகம் உடல் அல்லது அரைப் பகுதி மீதும் பரவும். அது மறைந்துவிடும். அதற்கு பேபி ஆயில் போட்டு இதமாக்கவும்.

**இளஞ்சிவப்பு சினைப்பு:** முகம் அல்லது சதை மடிப்பு போன்ற வியர்வை தங்கும் பகுதியில் இளஞ்சிவப்பு சினைப்புகள் ஏற்படும். இது அதிக உஷ்ணத்தால் ஏற்படுகிறது. குழந்தையை வெதுவெதுப்பான நீரில் குளிப்பாட்டவும். மென்மையான சோப்பு உபயோகிக்கவும். பின்பு மெல்லிய பருத்தி ஆடைகளை அணிவிக்கவும்.

**ஜான்ஸன்ஸ் பேபி சோப்:** குழந்தையின் மேனிக்கான சிறப்பான படைப்பு. தரமான பொருட்களால் மட்டுமே தயாரிக்கப்பட்டது ஜான்ஸன்ஸ் பேபி சோப்— இதில் மென்மையான குழந்தை மணம் கலந்துள்ளது. ஜான்ஸன்ஸ் பேபி சோப்— ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் மற்றும் லனோலின் சேர்ந்துள்ளது. இவை குழந்தையின் சருமத்தில் ஈரப்பதம் உண்டாக்கி, மென்மையோடு வைத்துக் கொள்கிறது. இதில் சருமத்தில் அலர்ஜி மற்றும் புள்ளிகளை உண்டாக்கும் கடுமையான இரசாயனம் மற்றும் எரிச்சலான பொருட்கள் இல்லை. அதன் இதமான மென்மையான செயல், இயற்கை எண்ணெய்களை நீக்காமலே, சருமத்தை சுத்தமாக்குகிறது. உங்கள் குழந்தையின் மேனி பனித்துளிபோல் மிளிரும், ஒளிரும்.

**உங்கள் குழந்தைக்கு வேறு எந்த சோப்பையும் நம்புவீர்களா ?**




**காரணம், குழந்தையின் மேனிக்கு விசேஷ கவனம் தேவைப்படுகிறது.**



*''பேபி கேர்'' என்ற இலவசப் பிரசுரம் பெற்றிட எழுதுங்கள்:*
*பேபி கேர் அட்வைஸர், ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்,*
*30, ஃபோர்ஜெட் ஸ்டிரீட், பம்பாய்-400 036.*
*உங்கள் குழந்தையின் பெயர் மற்றும் பிறந்த தேதியையும் குறிப்பிடவும்.*

**ஜான்ஸன் & ஜான்ஸன்**

## அருள்வாக்கு

ஆலிலைக்கு ஒரு விசேஷமுண்டு. அதிலே ஜீவஸாரம் ரொம்ப அதிகம். அதனால்தான் அது எத்தனை வாடினா லும் மற்ற இலைகள் மாதிரி வற்றிப் போய் சொறுங்குவதில்லை. சருகாகிற போது கூட மெத்தென்றே இருக்கும். அதனாலேயே பகவான் குழந்தையாக வருகிற போது மேலும் மெருகாக உள்ள தனக்கு மெத்தையாக அதை 'யூஸ்' பண்ணிக் கொண்டிருக்கிறான். மரத்தி லிருந்து வாடி உதிர்ந்த ஒரு ஆலிலையின் மேல் கொஞ்சம் ஜலத்தைத் தெளித்தால் போதும், மறுபடி அது பசுமை பெற்று விடுவதைப் பார்க்கலாம். பசுமைக் காகவே பசுவின் வெண்ணெய் சாப்பிடு பவன் இதில் சயனம் செய்வது ஏன்?

ஸம்ஸார ஸாகரத்தில் அலை பாய்கிற நமக்கு ஆலிலையைக் காட்டி நிலையான நித்யத்வத்தை, நிராலம்ப தத்வத்தை உணர்த்துகிறான்.

ஆல மரத்தை விட எத்தனையோ அகன்ற, அகண்ட தத்துவம் அவன். அந்த மரம் எத்தனை பெரிசாயிருந்தாலும், எத் தனை காலமிருந்தாலும் அதன் பரப்புக்கு எல்லை உண்டு, அதன் காலத்துக்கும் முடிவு உண்டு. அவனோ முடிவேயில்லாத அகண்டன். அனந்தன். ஆனாலும் இந்த மஹா ப்ரபாவத்தை மறைத்துக் கொண்டு, நாம் அவனை எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சுகிற விதத்தில் ஸரள ஸ்வபாவத் துடன் கூடிய குழந்தையாக இருக்கிறான். ''ஒன்னும் கவலைப்படாதேயப்பா! என் மாதிரி குழந்தை உள்ளத்தோடு இரு. ஸம்ஸார வெள்ளத்திலேயே அப்போது நீ அலையில் அடி படாமல் உன் பாட்டுக்கு ஆனந்தமாக, அதை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொண்டு மிதந்து கொண்டிருக் கலாம்'' என்று சொல்லாமல் சொல்லி றான். சிலுப்புவதாலே கொந்தளிக்கிற மோரிலே வெண்ணெய் பட்டுக் கொள் ளாமல் மிதப்பது போல, ஸம்ஸார ஸாக ரத்தில் அவனே வெண்ணெய்க் கட்டியாக மிதப்பது நாமும் அப்படி ஆக வேண்டும் என்று நம்மை நினைக்கச் செய்வதற்குத் தான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச் சார்ய சுவாமிகள்.



• ''உங்க பிரச்னையைப் பத்தி நாட் ராயன் சொன்னாரு! இந்தக் காலத்துல அரசியல் கட்சியோட உதவி இல்லாம எதை யுமே சாதிக்க முடியாது! அதுலயும் மேட்டூர்க்காரர் கட்சியிலே பெரிய ஆளு! அதுக்காக அவரு செய்யற அநியாயத்தை அப்படியே அனுமதிக்க நாம ஆடுமாடுங்க இல்லே! உங்க ஊரு தண்ணிப் பிரச்னை யைக் கவனிக்காம அவரு மாவுமில் கட்ட முடியாது! அறப் போராட்டம் நடத்தி இந்த மாவட்டத்தையே கலக்கிடுவேன்! நமக்கு ஆயுதங்கள் தேவை இல்லை! கைகள் போதும்! நமது நியாயமான பிரச்னையைத் தீர்த்துவைக்காவிட்டால் இந்த மாவட்டமே அதிரும்படி மாபெரும் 'மனிதச் சங்கிலி'' போராட்டம் வெடிக்கும்!'' நம் போராட்டத் தைப் பாத்த பிறகு மேட்டூர்க்காரர் இறங்கி வந்து உங்க பிரச்னையைப் பேசலே... என்பேரு வேங்கை வேந்தனில்லே!''

கும்பல் உணர்ச்சி வேகத்தில் உந்தப் பட்டு படபடவென்று கைதட்டியது. ''வாழ்க!'' கோஷம் வானை முட்டியது!

குமரேசன் ஆலமர மண்திட்டின் மீது மௌனச்சாமியாய் உட்கார்ந்திருந்தார்!

அதற்குப்பின்... வேங்கை வேந்தனை அடிக்கடிப் போய்ப் பார்த்தான் நாட்ராயன்! ''மனிதச் சங்கிலி'' போராட்டத்துக்குப் 'பர்மிஷன்' வாங்க, நோட்டீஸ் அடிக்க, போஸ்டர் ஒட்ட, மேச்சேரியிலிருந்து குஞ் சாண்டியூர் வரை ''மனிதச் சங்கிலி'' போட ஆள் சேர்க்க, இப்படியாக ஆயிரம் செலவு களைச் சொல்லி நாட்ராயனைப் 'பஞ்சக் குடிக்கும்' தன் வீட்டுக்குமாக நடக்க அடித் தான் வேங்கை வேந்தன்! ஐந்து, பத்து என்று ஆரம்பித்து, கடைசியில் ஐம்பது, நூறு என்று வீட்டுக்கு வீடு ''வரி'' வைக்கும்படி ''வசூல்'' பல கட்டங்களில் தொடர்ந்து வேங்கை வேந்தனின் பாக்கெட்டில் விழுந்து மறைந்ததே ஒழிய 'மனிதச் சங்கிலியும்' இல்லை மண்ணாங்கட்டியும் இல்லை. இடையில் ''பஞ்சக்குடி'' மக்களின் பணத் தில் 'மீட்டிங்' போட்டு, தன் கட்சிக் கொள் கையை 'தூள்' கிளப்பிவிட்டு கடைசியில் ஒற்றை வரியில் 'கிணற்றை விட்டுக் கொடுக்கும்படி' மேட்டூர்க்காரருக்கு வேண்டுகோள் விடுத்தான் வேங்கை வேந்தன்..

பஞ்சக்குடி பெண்கள் போகவர, நாலு மைல் நடந்து, மெயின் ரோடு ஓரத்திலிருந்த பைப்பில் தண்ணீர் பிடித்துக் கொண்டுவரப் பழகிப் போயினர் - மாவுமில் கட்டி முடிக் கும் தறுவாயில் நின்றது. இறுதிக்கட்ட வேலைகளும், வர்ணப் பூச்சு வேலைகளும் துரிதமாய் நடந்து கொண்டிருந்தன....



அமெரிக்க எழுத்தாளர் கிளேன்சி எழுதிய வித்அவுட் ரிமோர்ஸ் என்ற புத்தகம் 14 மில்லியன் டாலருக்கு விற்பனை உரிமை பெற்றுள்ளது. இது உலக சாதனை... இவருடைய முந்தைய இரண்டு புத்தகங்களும்; சினிமாவாக வெளிவந்தன. விற்பனையிலும் சாதனை நிகழ்த்தின. இப்போது ''கல்ப் வார்'' பற்றிய மற்றொரு சினிமாவுக்கும் இவர் கதை வசனம் எழுதப்போகிறார். புத்தக உரிமைக்காக எனக்குத் தரும் பெரும் தொகையை வைத்து என்ன செய்வது என்றே புரியவில்லை என்கிறார் இந்த கிளேன்சி...

ஆதாரம் : டைம்ஸ் ஆப் இந்தியா

தகவல் : ராஜி ராதா

**ப**ஞ்சக்குடியின் வண்டிப்பாதை திடீரென மண் நிரப்பிச் சமன் செய்யப்பட்டது. கட்சிக் கும்பல் அடிக்கடி ஊருக்குள் 'டேரா' போட்டது. கவர்ன்மெண்ட் அதிகாரிகளும், காவல் துறையினரும் அடிக்கடி பஞ்சக் குடிக்குள் வந்து போயினர்!

பஞ்சக்குடிக்கு மந்திரி வந்து மாவுமில்லைத் திறந்து வைக்கப் போவதாக நாள், நேரம் குறிப்பிட்டு கலர் கலராய் நோட்டீஸ் விநியோகிக்கப் பட்டதைப் பார்த்ததும்தான் நாட்ராயன் நொறுங்கிப் போனான்! அதிலும் பெரிய பெரிய போஸ்டர்களில் ஒருபுறம் வேங்கை வேந்தனின் படமும், மறுபுறம் மேட்டூர்க்காரரின் படமும் அச்சிடப்பட்டு, மாவட்டத் தலைவர் மேட்டூர் முனியப்பரும் மாவட்டச் செயலாளர் வேங்கை வேந்தனும் மந்திரியை வாழ்த்தி வரவேற்பதாக வர்ண எழுத்துக்கள் மின்னுவதைக் கண்டதும் நாட்ராயனுக்கு நரம்புகள் முறுக்கேறின! வெறும் ஒன்றியச் செயலாளராக ஒண்டிக் கொண்டிருந்த வேங்கை வேந்தன், கட்சியில் மளமளவென்று மேலேறி மாவட்டச் செயலாளராவதற்குப் பஞ்சக் குடியின் தண்ணீர்ப் பஞ்சத்தைப் பகடையாக்கிக் கொண்டான் என்பதைப் புரிந்து கொண்ட நாட்ராயன் அதை விளக்கி, ஊர் ஜனங்களை உசுப்ப, ஒவ்வொரு வீடாகத் தேடிப் போனான் - யாரும் அவனைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை -

**ஆ**லமரத்தடியில் சின்னக் கும்பல் இருப்பதைக் கண்டு பக்கத்தில் போன நாட்ராயன் பூஜைசாமான்கள் பரப்பி வைக்கப் பட்டிருப்பதையும், துண்டு ஒன்று விரிக்கப் பட்டிருப்பதையும் பார்த்தான். குமரேசன் கண்மூடி, கைகுவித்துக் கடவுளைத் தியானித்து விட்டு, இடுப்பு வேட்டியின் முடிச்சிலிருந்து ஒரு கட்டு கரன்ஸியை எடுத்துத் துண்டில் போட்டார்!

''நம்ம ஊரு பொதுக் கிணத்து வேலைக்கு மேட்டூர்க்காரர் முனியப்பர் குடுத்த 'மொய்' ரூபா பத்தாயிரம்!''

வெண்கலக் குரலைத் தொடர்ந்து, ஒவ்வொருவராகப் பெயர் சொல்லி 'மொய்' எழுத, நாட்ராயன் நிற்க முடியாமல் தகர்ந்தான்!

திறப்புவிழா செய்த கோலாகலத்தோடு மாவுமில் கம்பீரமாய் நின்று கொண்டிருந்தது. அதைக் கடந்து ஒரு பர்லாங் தூரத்தில், ஊர்க் கோவிலை ஒட்டிய இடத்தில் ஜரூராக வேலை நடந்து கொண்டிருந்தது. மண்வெட்டியும், கடப்பாரையும் மோதிய சத்தத்துக்கு, அள்ளிய மண் விழுகின்ற நேர்த்தி சந்தம் கட்டியது.

நாட்ராயன் பார்த்தான் - ஊர் முச்சூடும் உத்வேகத்தோடு வேலை செய்து கொண்டிருக்கும் வேகத்தைப் பார்த்தான்! எல்லாக் கைகளும் இணைந்து செயல்படுவதானால் உருவாகப்போகும் இந்த பொதுக் கிணறு பஞ்சக்குடியின் பஞ்சங்களைத் தீர்த்துவிடும் போலத்தான் தோன்றியது....

வேட்டியை இறுக்கிக் கட்டினான்! துண்டை எடுத்துத் தலையில் முண்டாசு போட்டான்! அடுத்த நிமிஷம் அவன் கையில் கடப்பாரை ஒன்று கொடுக்கப் பட்டது! திடுக்கிட்டுத் திரும்பிப்பார்த்தான்! மண் பூசிய வெற்று உடம்பில், வியர்வை வழிந்து வெயிலில் பளபளக்க முறுவலோடு நின்றிருந்தார் குமரேசன்.

''ஆயுதத்துல என்னிக்குமே குத்தமில்லே! அதை இயக்கற மனசைப் பொறுத்துத்தான் அழிக்கவும் ஆக்கவும் செய்யுது! அன்னிக்கே நான் இதைச் சொல்லத்தான் வந்தேன்! அதுக்குள்ளே அரசியலை இழுத்துவுட்டு யாரையோ மேலேத்தி நம்ம சனத்தை கீழே உருட்டிப் புட்டே! போராட்டமாமே போராட்டம்! இது தான்டா உண்மையான போராட்டம்! ஒத்துமையா கை கோத்து, நம்மளை நாமே நம்பி, காப்பாத்திக்க இணைஞ்சு நிக்கறமே! இதுதான்டா உண்மையிலேயே மனிதச் சங்கிலி!''

உடம்பெங்கும் ஜிவ்வென்று உணர்ச்சி பிரவகிக்க, இறுக்கமாகக் கடப்பாரையைப் பற்றிக் கொண்டான் நாட்ராயன்!... கீழே பள்ளத்தில் மண்ணை வாரி சட்டியில் நிரப்பி சிலர் நீட்ட, வரிசையாய் அணிவகுத்துப் பலர் நின்று அதை வாங்கி மேலே கொட்டிவிட, மின்னல் வேகத்தில் சங்கலித் தொடராய் வேலை நடப்பதைப் பார்த்தான். பள்ளத்தில் குதித்து கடப்பாரையால் மண்ணைப் பிளக்க ஆரம்பித்தான்!



## தீபாவளித் திருநாளின் முக்கியத்துவமும், உங்களுக்கு ஒரு வேண்டுகோளும்

வரும் தீபாவளித் திருநாளை வெகு விமரிசையாக கொண்டாட, இப் பத்திரிகை/இச் செய்தித்தாள் படிக்கும் அன்பு உள்ளங்களுக்கு சிவானந்த ஆசிரமக் குழந்தைகளும், முதியோர்களும் தங்களின் வாழ்த்துக்களை மனமுவந்து தெரிவிக்கிறார்கள். பண்டிகை நாட்களில் நிதி உள்ளவர்கள், தத்தம் நிலைமையினை அனுசரித்து விழாக்களை கொண்டாடுகிறார்கள். இந்தத் திருநாளில் பல்லாயிரக்கணக்கான இளம் நெஞ்சங்கள், ஆதரவற்றோர், பார்வையிழந்தோர், மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள், சிறைக் கைதிகள், முதியோர், வசதியில்லாதார், உடல் ஊனமுற்றோர் பண்டிகையை பொருள் இல்லாமல் கொண்டாட இயலாதவராக இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு தாங்கள் மனமுவந்து பொருளாகவோ, நிதியாகவோ, துணியாகவோ, பட்டாசுகளாகவோ கொடுத்து உதவி செய்து ஆத்ம திருப்தி அடையலாம். எந்த ஒரு பண்டிகையிலும் நம்முடைய பொருளில் சிறிதேனும் பிறருக்கு ஈந்தால், அந்தப் பண்டிகையின் மகிழ்ச்சியினையும் பிறருக்கு உதவினோம் என்ற ஆத்ம திருப்தியும் கிடைக்கப் பெற்று பேரானந்தம் அடையலாம். தாங்கள் அருகிலுள்ள சேவை ஸ்தாபனத்திற்கு சென்று உங்கள் மகிழ்ச்சியினை பகிர்ந்து கொள்ளுங்கள்.

சிவானந்த ஆசிரமத்தில் உள்ள சுமார் 250 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும், இத் தீபாவளித் திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொது மக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் தலா ஒரு ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால், இத் திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூர்ணமாக நிறைவேறும் என்பதல்லாமல் இந் நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோரும் பயன் பெறுவர்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக் குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். வருமான வரிவிலக்கும் அளிக்கப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாக அல்லது பொருட்களாக,

**நிர்வாகி, ''சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்''**
**நெ. 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்,**
**சென்னை - 600 059.**
**தொலைபேசி எண் : 401078, 402354**

என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

உங்கள் செல்வம் :

# புதிய வெளியீடுகள்; பெருகும் லாபங்கள்!

அக்டோபர் - நவம்பரில் பங்குமார்க்கெட்டுக்கு வரவிருக்கும் சில நிறுவனங்களைப் பற்றிய குறிப்புக்கள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றில் செய்யப்படும் முதலீடுகள் நல்ல டிவிடெண்ட் வருவாய் பெறும் என்பதுடன், பங்குகளின் மதிப்பு கணிசமாக உயரவும் வாய்ப்புண்டு.

## MADRAS HI-TECH CIRCUITS LTD :

இந்த நிறுவனம், புகழ்பெற்ற ஸிம்ஸன் கம்பெனியும் எல்காட்டும் இணைந்து தோற்றுவிப்பதாகும். 'எல்காட்' என்பது தமிழக அரசின் நிறுவனம். 'எலக்ட்ரானிக்ஸ் கார்ப்பரேஷன், தமிழ்நாடு' என்பதன் சுருக்கம். இவை கூட்டாகத் தொடங்கும் புதிய நிறுவனம், அமெரிக்க நிறுவனம் ஒன்றின் ஒத்துழைப்புடன் சர்க்கியூட் போர்டுகளைத் தயாரிக்க இருக்கிறது. சர்க்கியூட் போர்டு என்பது எந்த எலெக்ட்ரானிக் சாதனத்திலும் இன்றியமையாதது. அதனால் இதற்கு நல்ல எதிர்காலம் உண்டு. சீக்கிரமே உற்பத்தி தொடங்க உள்ள இந்த நிறுவனம் ஒவ்வொன்றும் பத்து ரூபாய் பெறுமானமுள்ள 27,50,000 பங்குகளை விநியோகிக்க உள்ளது.

## EASTERN SILK INDUSTRIES, CALCUTTA

ஏற்கெனவே ஏற்றுமதி மார்க்கெட்டில் சக்கைபோடு போட்டு வரும் நிறுவனம் இது. பட்டு ஏற்றுமதி அபிவிருத்திக் கழகத்தின் பல பரிசுகளை வென்றுள்ளது. பட்டிலே பலவித ஆடைகளையும் டை, ஸ்கார்ஃப் போன்றவற்றையும் ஏற்றுமதிக்காகவே உற்பத்தி செய்கிறது. தவிர தோல் பொருள்கள் உற்பத்திப் பிரிவும் இந்த நிறுவனத்தின் ஓர் அங்கமாக இயங்குகிறது. இந்தப் பிரிவு பெண்களுக்கான தோல் பைகள், பர்ஸுகள், பிரீஃப்கேஸ்கள் முதலிய பலரகப் பொருட்களை ஏற்றுமதிக்கென்று உற்பத்தி செய்கிறது. மேனாடுகளில் இவற்றுக்கு நல்ல கிராக்கி இருக்கிறது. விரிவாக்கத்தை முன்னிட்டு இந் நிறுவனம் ஒவ்வொன்றும் பத்து ரூபாய் பெறுமானமுள்ள 20,12,800 பங்குகளை விநியோகிக்க இருக்கிறது. ஒவ்வொரு பங்குக்கும் கூடுதலாக ரூ 10 தந்துதான் பெற இயலும். ஆனால் இப்போதே இந்த நிறுவனத்தின் பங்குகள் ரூ 60க்குப் பங்கு மார்க்கெட்டில் விலை பேசப்படுவதைக் கவனிக்க வேண்டும்.

## OSWAL FATS & OILS, LTD, NEW DELHI

ரொம்பப் பிரபலமான ஓஸ்வால் குருப்பைச் சேர்ந்த நிறுவனம் இது. லாபகரமாக ஏற்கெனவே இயங்கி வருகிறது. பலரகப் பொருள்களை உற்பத்தி செய்கிறது. கடின எண்ணெய், சோப்பு முதலியன இதில் அடங்கும்.

இந்த நிறுவனம் இப்போது புதிய துறையில் புக நினைக்கிறது. உ.பியில் காகித ஆலை தொடங்க எண்ணுகிறது. வனஸ்பதி தயாரிப்புக்கு மேலும் ஓர் ஆலை நிறுவப் போகிறது. இதற்கெல்லாம் மூலதனம் தேவைப்படுவதால் பத்து ரூபாய் பங்கை ரூ 150க்கு விநியோகிக்க உள்ளது! இவ்வாறு 36,66,700 பங்குகள் விநியோகிக்கத் திட்டம். 'பத்து ரூபாய் பங்குக்கு ரூ 140 கூடுதல் விலையா?' என்று மலைப்பவருக்கு ஒரு செய்தி : இந்த நிறுவனத்தின் பத்து ரூபாய் பங்குகள் இப்போது ஷேர் மார்க்கெட்டில் ரூ 400க்கு விலை பேசப்படுகின்றன!

## PIONEER OVERSEAS FINANCE LTD, MADURAI

சிவகாசி, 'ஸ்டாண்டர்ட் ஃபயர் ஒர்க்ஸ்' ரொம்பப் பிரசித்தி. தீபாவளி சமயத்தில் இவர்களது பட்டாசு, வாணங்களைக் கொளுத்தாதவரே அநேகமாக இருக்க முடியாது. இவர்கள், இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கியுடன் இணைசேர்ந்து பயனீர் ஓவர்ஸீஸ் ஃபைனான்ஸ் என்ற நிறுவனத்தை ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்தி வருகின்றனர். தனது செயல் திட்டங்களை விரிவாக்கக் கருதி இந்த நிறுவனம் தற்போது 25 லட்சம் பங்குகளை தலா ரூ 10க்கு விநியோகிக்கிறது. இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கியின் தொடர்பு இருப்பதாலும் ஏற்கெனவே நன்கு நடந்து வரும் நிறுவனமாதலாலும் இதில் முதலீடு செய்வது லாபகரமாகவே இருக்கும்.

## KAVERY ENGINEERING INDUSTRIES

மிகவும் பிரபலமான வி.டி. சுவாமி குருப் நிறுவனத்தைச் சேர்ந்தது. திருச்சியில் தொழிலகம் இயங்குகிறது. இன்ஜினியரிங் நிறுவனமான இது, பல்வேறு தொழிலகங்களின் நிர்மாணத்திலும் அவற்றுக்குத் தேவைப்படும் இயந்திரங்களைப் பெற்று வந்து நிறுவுவதிலும் உதவுகிறது. கம்பெனியின் பத்து ரூபாய் பங்குகள் ரூ 50க்கு இன்று விலை பேசப்படுகின்றன. செயல்பாடுகளின் விரிவாக்கம் கருதி இந் நிறுவனம் புதிதாக 11,55,000 பங்குகளை விநியோகிக்கிறது. பத்து ரூபாய் பெறுமானமுள்ள ஒவ்வொரு பங்குக்கும் ரூ 25 கூடுதல் விலை தந்து பெறுதல் வேண்டும் என்றாலும் எதிர்காலம் சிறப்பாகவே உள்ளது.

- வி. கோபாலன்



● கால்களின் உதவியின்றியே நீச்சல்.....

# துவண்ட கால்கள் துவளாத உள்ளம்!

**இடுப்பிற்குக் கீழே எந்தவித சுவாதீனமும் இல்லாமல் வெறுமனே ஒட்டிக் கொண்டிருக்கும் இரண்டு துவண்ட கால்களையுடைய பெண்மணி ஒருவர், இங்கிலீஷ் கால்வாயை நீந்திக் கடந்து சாதனை படைத்திருக்கிறார். இந்தச் சாதனை கின்னஸில் இடம்பெறப்போகிறது.**

பிறந்து இரண்டு வயது வரையிலும் மற்ற எல்லாக் குழந்தைகளைப் போலவும் துறுதுறுப்பும் கட்டித் தனமுமாகத்தான் இருந்திருக்கிறாள் ஜானகி.

திடீரென்று ஒருநாள் வந்த காய்ச்சல் குழந்தையை முடக்கிப் போட்டு விட்டது.

'போலியோ அட்டாக்' என்றார் டாக்டர். போதாததற்கு பராலிஸிஸ் ஸ்ட்ரோக் வேறு. இரண்டு கால்கள் மட்டுமல்லாது வலதுகையும் விழுந்துவிட்டது. கழுத்தும் நிற்காமல் துவண்டு விட்டது.

உள்ளூரில் குணமாகவில்லையென்றதும் குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஊர் ஊராய் அலைந்திருக்கிறார்கள். பிரயோசனமில்லை. பம்பாய், ஜெய்பூர் என்று போய் வைத்தியம் பார்த்தும் பயனில்லை.

அந்தக் காலத்தில் வீல்சேர்களும் அவ்வளவாகப் புழக்கத்தில் இல்லை. இவ்வளவுதான்... இது தான் தலைவிதி.... இனிமேல் வாழ்நாள் பூராவையும் இப்படித் தான் கழித்தாக வேண்டும் என்பதும் இறுதியாக நிச்சயிக்கப்பட்டு விட்டது.

வாழ்க்கையே ஒரு சவாலாகிப் போனது அந்தக் குழந்தைக்கு மட்டுமில்லை. அவளுடைய பெற்றோருக்கும்தான்.

வீட்டிற்கு அருகிலுள்ள 'ஆர்யபாட வித்யா சாலை'யில் ஜானகியைச் சேர்த்தார்கள்.

அம்மா இடுப்பில் தூக்கிக் கொண்டுபோய்க் குழந்தையை வகுப்பில் இறக்கிவிட்டு விட்டு வருவாள்... பகல் சாப்பாடு கொண்டு போய் ஊட்டிவிடுவாள்... இடையில் இயற்கைத் தேவைகள் கழிக்க வேண்டுமெனில் வீட்டிற்கு ஆள்வரும். செய்து கொண்டிருக்கும் வேலையை அப்படியே போட்டுவிட்டு வகுப்பை நோக்கி ஓடுவாள் அம்மா. குழந்தையின் தேவையை நிறைவேற்றி, சுத்தப்படுத்தி உட்கார்த்தி வைத்துவிட்டு, மறுபடி வீட்டிற்கு வருவாள்.....

சி.என். ஜானகிக்கு பெங்களூர் என்.ஆர். காலனியில் வீடு. அப்பா கர்நாடக அரசாங்க கஜானாவில் உயர் அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். பெயர் நாகப்பா. அம்மாவின் பெயர் இந்திரம்மா.

''உடம்புதான் ஊனமே தவிர படிப்பில் படுகெட்டிக்காரி ஜானகி. அன்று முதலே அவள் bright ஸ்டூடண்ட்தான்'' என்கிறார் அப்பா.

சின்னப் பெண்ணாக இருந்தவரைக்கும் அம்மா இடுப்பில் தொற்றிக் கொண்டு போய் வகுப்பில் இறங்கியாகிவிட்டது. கொஞ்சம் பெரிதாக வளர்ந்த பின்னர்தான் பிரச்னையே வந்தது.

வகுப்பிற்குப் போக வேண்டும் என்றால் ஐந்தாறுபடிகள் ஏற வேண்டும்....

இந்தப் பக்கம் ஒருவர் அந்தப் பக்கம் ஒருவர் என்று கக்கத்தில் கை கொடுத்துத் தூக்கி விடுவார்கள்.... ''அது ஒரு பயங்கரக் கனவு'' என்கிறார் ஜானகி - பள்ளி, கல்லூரி நாட்களில் பட்ட அவதிகளை எண்ணிப் பார்த்து.

கிறிஸ்டியன் வீக்கினர் உடல் ஊன முற்றவர்களுக்கென 1985 - ல் ஒரு பயணம் ஏற்பாடு செய்து அமெரிக்காவுக்கு அழைத்துச் சென்றிருந்தனர். அங்கே விஸ்கான்ஸின் என்ற இடத்தில் ஜானகி தங்கியிருந்தபோது இன்டோர் ஸ்விம்மிங்பூலில் சில உடல் ஊனமுற்ற குழந்தைகள் நீந்தி விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்.

உடனே உள்ளுக்குள் ஒரு பெரிய மாறுதல்.....

நாமும் ஏன் நீச்சல் பழகக்கூடாது.....? நாம் எதற்காக நம்மை ஊனம் என்று நினைத்துக் கொண்டு தத்தித் தவழ்வதும் வீல்சேரில் ஊர்வதுமாக இருக்கிறோம்....?

இதே எண்ணத்துடன் இந்தியா திரும்பினார். இங்கே வந்து மற்றவர்களிடம் சொன்னபோது எல்லாரும் கேலி செய்தனர். 'இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் தான் பிடித்திருக்க வேண்டும்....' என்றனர்.

யார் என்ன சொன்னபோதும் கவலைப் படாத ஜானகி .வீட்டிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவிலிருக்கும் பசவன்குடி அக்வெடிக் சென்டரில் நீச்சல் பயிற்சி தொடங்கினார். தண்ணீரை உந்தித்தள்ளி முன்னே செல்ல கால்களின் வேகமான 'உதைப்பு' தேவை. அது இல்லாமலேயே முன்னேறும் கலையைக் கற்றார் ஜானகி.

ஓரளவு நீச்சல் பயிற்சியில் தேறினபிறகு உடல் ஊனமுற்றவர்களுக்காக நடத்தப்பெறும் விளையாட்டுப் போட்டிகளில் பங்கெடுக்க ஆரம்பித்தார். இந்த வகையில் இந்திய நீச்சல் வீராங்கனையும் ஆசிய நீச்சல் போட்டியில் தங்கம் வென்றவருமான அனிதா சூட்டின் அறிமுகம் கிடைத்தது. அகில இந்திய உடல் ஊனமுற்றோர் விளையாட்டு மையத்தின் இயக்குனராயிருக்கும் அனிதா சூட், ஜானகியின் நீச்சல் திறமைகளைப் பார்த்து வியந்தார். வியந்ததோடு நில்லாமல் ஜானகியின் மனத்தில் ஒரு லட்சியத்தையும் விதைத்தார்: ''இரண்டு கால்களும் சுவாதீனமற்ற நிலையில் இந்த அளவுக்கு நீச்சல் பழகியிருப்பது சாதனைதான். ஆனால், இதையே ஒரு மிகப் பெரிய சாதனையாக மாற்ற வேண்டுமெனில் நீ இன்னொன்றையும் செய்ய வேண்டும். இங்கிலீஷ் கால்வாயை நீந்திக் கடக்க வேண்டும். முடியுமா என்று யோசித்துப்பார்.....''

அன்று முதல் ஜானகியின் எண்ணம் முழுக்க முழுக்க 'இங்கிலீஷ் கால்வா'யின் மீது திரும்பியது.

டென்னிஸ் விளையாடுகிறவர்களின் உயர்ந்தபட்சக் கனவு விம்பிள்டனில் ஜெயிக்க வேண்டும் என்பதாக இருக்கும். அதுபோல் நீச்சல் வீரர்களின் 'உயர்ந்த பட்சக்கனவு' இங்கிலீஷ் கால்வாயைக் கடப்பதுதான்.

இதனைக் கடப்பது அவ்வளவு சாதாரண செயல் அல்ல. உலகின் மிகப் பெரிய நீச்சல் வீரர்களே கூட இந்த முப்பத்தைந்து கிலோ மீட்டர் கால்வாயைக் கடக்க முடியாமல் தோல்வியுடன் திரும்பியிருக்கிறார்கள்.

காரணம் -

முதலாவது, அந்தத் தண்ணீரின்



● பெற்றோருடன் ஜானகி

சில்லிப்பு. வடதுருவத்தின் பனி உருகி நேரடியாக இங்கே கலப்பதால் ஐந்து டிகிரிக்கும் குறைவான 'ஜில்' தண்ணீர்!

இரண்டாவது, சர்வசாதாரணமாக இருபதடி உயரத்துக்கு எழும்பும் ராட்சஸ அலைகள், சுழன்றடிக்கும் காற்றுடன் கூடிய கோபமான கடல்...

மூன்றாவது மற்ற கடல்களைவிடப் பயங்கர உப்புக் கரிக்கும் தண்ணீர். ஒரு வாய் உள்ளே போனாலும் 'குபுக்' தான்!

இத்தனைத் தொந்தரவுகளுக்கு ஈடு கொடுக்க முடியாமல் நிறையப்பேர் தோல்வியை ஒப்புக் கொண்டு திரும்பியிருக்கின்றனர்..



### அடுத்த இதழில்....

● **விழிப்புணர்வு விளக்கை ஏற்றுகிறார்கள்.**
**- சிறப்புக் கட்டுரை**

ஆனாலும் இந்தச் சவாலை ஏற்றே தீருவது என்று முடிவு செய்து கொண்டார் ஜானகி.

ஜானகி இத்தனை நாட்களும் நீந்திப் பழகியது பசவன்குடி நீச்சல் குளம். இப்போது இந்தச் சாதனையை மேற்கொள்ள வேண்டுமெனில் கடல் நீச்சலில் கில்லாடியாயிருக்க வேண்டும். என்ன செய்யலாம்?

கர்நாடக மாநிலம் உடுப்பிக்கு அருகில் 'மால்பே பீச்' சரியான பயிற்சிக்களம் என்று சொன்னார்கள். அங்கே செயின்ட் மேரீஸ் தீவு என்ற இடம் இருக்கிறது. ஏகப்பட்ட சோதனைகள் உள்ள இடம். பயங்கரக் காற்று, உயர எழும்பும் அலைகள்.... நடு நடுவே பயங்கரச் சுழல்கள் என்று இருக்கிறபடியால் அதனை நீந்திக் கடப்பதுதான் சரியான பயிற்சி என்று தீர்மானித்து அங்கே நீந்த ஆரம்பித்தார் ஜானகி. தினந்தோறும் இருபது கிலோ மீட்டர் தூரம் நீந்துவார். ஆரம்பத்தில் மிகச் சிரமமாயிருந்த இந்தப் பயிற்சி கொஞ்சம் கொஞ்சமாய்ப் படிய ஆரம்பித்தது.

ஜானகி மால்பே கடற்கரைப் பகுதியில் பயிற்சி பெற்றதை நேரில் பார்த்த ஒரு கன்னடப் பத்திரிகை ஆசிரியர் இப்படி விவரித்திருந்தார்... ''கடற்கரை வரைக்கும் போய்விடுகிறார் ஜானகி. கடற்கரை மணலில் வீல் சேர் போகாது. ஆகவே அங்கிருந்து இரண்டு பேர் தூக்கிக் கொண்டு போய்க் கடலுக்கு அருகாமையில் உட்கார வைக்கிறார்கள். உடனே இவர் கையை ஊன்றி நகர்ந்து நகர்ந்து கடலுக்குள்ளே போய் உட்கார்ந்து கொள்கிறார். கடலுக்குள் பாய்ந்து நீந்த ஆரம்பிப்பதற்குக் கால்கள் அவசியம். இவருக்குக் கால்களின் செயல்பாடு இல்லாததால் ஒரு பெரிய அலை வருகிறவரை அதனை எதிர் நோக்கிப் பொறுமையாக உட்கார்ந்திருக்கிறார். அந்தப் பெரிய அலை வந்து இவரைக் கடலுக்குள் இழுத்துச் செல்கிறது. பிறகு நீந்த ஆரம்பிக்கிறார்.......'

மால்பே பீச் பயிற்சி மட்டும் இங்கிலீஷ் கால்வாய்க்குப் போதுமா என்றால் போதாது. அந்தப் பனி உறையும் நீரில் இறங்கித் தாக்குப்பிடிக்க தேக வலு மிக முக்கியம். என்ன செய்யலாம்?

பெங்களூர் கண்டீரவா ஸ்டேடியத்தில் விடியற்காலை ஐந்து மணிக்கே உடற்பயிற்சிக்குப் போக ஆரம்பித்தார். பளுதூக்குதல்... ஈட்டி எறிதல்... வீல்சேர் ரேஸ்... என்று கடுமையான பயிற்சி.

இதற்கிடையில் தானே கார் ஓட்டக் கற்றுக் கொள்ளுவது என்று முடிவெடுத்து ஊனமுற்றோர்களுக்காக விசேஷமாய்த் தயாரித்த மாருதியை ஓட்டப் பழகினார். பதினைந்தே நாட்களில் கார் ஓட்டப் பழகி லைசன்ஸெல்லாம் பெற்று... பந்தயம் ஒன்றிலும் பங்கேற்று 'ஊனமுற்றவர்களிலேயே அதிவேகமாய் ஓட்டும் டிரைவர்' - என்ற பட்டத்தையும் வாங்கினார்.

நீண்ட நேரம் தண்ணீரில் இருந்து பயிற்சி பெற வேண்டும் என்பதற்காக அதிகாலை நான்கு மணி முதல் பகல் இரண்டு மணி வரை.... பத்துமணி நேரம் தண்ணீருக்குள்ளேயே நீந்தும் பயிற்சி செய்தார். ''அடேயப்பா அ ந் த ப் பொண்ணு அபாரம்... எவ்வளவு சிரமமான பயிற்சி செய்வாள் தெரியுமா? உடம்பை வருத்திக்கத் தயங்கவே மாட்டாள்'' - என்கிறார் பசவன்குடி நீச்சல் குளக் கண்காணிப்பாளரான கேப்டன் சண்முகம். இவர் 1956 முதல் 72 - வரை நீச்சலில் இந்திய சாம்பியனாக இருந்து ஆசியப் போட்டிகளில் வெள்ளிப் பதக்கம் வென்றவர்.

எல்லாப் பயிற்சிகளும் முடிந்தன.

இங்கிலீஷ் சானல் அசோசியேஷனிலிருந்து போட்டியில் கலந்து கொள்ளச் சொல்லி அழைப்பு வந்தது. கர்நாடக அரசாங்கம் போகவர டிக்கெட் செலவை ஏற்றுக் கொண்டது.

எடுத்த எடுப்பிலேயே இங்கிலீஷ் கால்வாயில் போய்க் குதித்து நீந்திவிட முடியாது என்பதனால் லண்டன் சென்று ஷேக்ஸ்பியர் பீச்சில் மூன்று வாரங்களுக்குத் தினந்தோறும் பயிற்சிகள் மேற்கொண்டார்.

ஷேக்ஸ்பியர் பீச்சிலிருந்து பிரான்ஸிலுள்ள விஸ்ஸண்ட் என்ற இடத்தைச் சென்றடைய வேண்டும். அதுதான் இலக்கு. மொத்தம் 37 கிலோ மீட்டர்கள்....

இதனைத் தனி ஒருவரால் கடக்க முடியாது என்பதால் குழு முறையில் கடப்பது போல்தான் நிகழ்ச்சி அமைப்பார்கள்...

இதற்கென்று குறிக்கப்பட்ட நாள் ஜூலை 29.

இரண்டு அமெரிக்க வீரர்கள், இரண்டு இங்கிலாந்து வீரர்கள், ஒரு ஆஸ்திரேலிய வீரர்.... மற்றும் ஜானகி.



## பாதி நாடகம்; மீதி சினிமா!

# கடைசி நிமிஷங்கள்!

பைபாஸ், பலூன், வால்வ் ரீப்ளேஸ்மெண்ட் என்று எத்தனையோ முன்னேற்றம் வந்துவிட்ட இந்நாளில் தொழிலதிபர் நல்லசிவத்தின் மகனுக்கு இருதயமாற்று அறுவைச் சிகிச்சை செய்தால்தான் பிழைப்பான் என்பதே ஒரு மாதிரிதான் இருக்கிறது. சரி, இது நாடகம் என்று ஒப்புக் கொண்டு மேலே பார்த்தால்.....

அதற்காக பாஸ்கர் என்ற ஏழைப் பையனுக்குத் தனது நிறுவனத்தில் வேலை போட்டுத் தருகிறார் நல்லசிவம். மெடிகல் செக்-அப்பின் போது, அவனுக்கு மூளையில் ட்யூமர் என்று சொல்லி, ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்வதாகத் திட்டம் போட்டுக் கொடுக்கிறார் நல்லசிவத்தின் டாக்டர் நண்பர் கிருஷ்ணராஜ். அறுவைச் சிகிச்சையின் போது பாஸ்கருக்கு 'பிரெயின் டெத்' உண்டாக்கி, பிறகு கிறிஸ்டியன் பெர்னார்டுதனமாக இதய மாற்று அறுவைச் சிகிச்சை செய்து நல்லசிவத்தின் பிள்ளையைக் காப்பாற்றி விடலாம்....

இந்த சதித் திட்டத்தை ஃபோனில் குறுக்குப் பேச்சில் கேட்டுவிடும் ரம்யா, முன்பின் பார்த்திராத பாஸ்கரைக் காப்பாற்ற இன்ஸ்பெக்டர் நாகராஜை நாடுகிறாள். நாகராஜுக்குப் பணம் பண்ண ஒரு வழி கிடைத்தவுடன் சும்மாவா இருப்பார்? ஆனால் ரம்யா ஜனாதிபதி, முதல்வர், ஐ.ஜி. எல்லாருக்கும் அனுப்பும் கடிதங்கள் மேலும் சிக்கலைத் தோற்றுவிக்கின்றன. சி.ஐ.டி. விரித்த வலையில் விழுந்த இன்ஸ்பெக்டர் நாகராஜ், விபத்தில் மரணமடைகிறார். கடைசி நிமிஷத்தில் பாஸ்கர் ஆபரேஷன் தியேட்டருக்கு அழைத்துச் செல்லப்படும் திக் திக் சமாசாரங்களில், அகஸ்டோ நமது மூச்சுச் சத்தம் மட்டுமே அரங்கில் கேட்க வைத்திருக்கிறார்.

இது வீடியோஸ்கோப் நாடகம். அதனால் பாதியைப் பதினாறு எம்.எம். திரையிலும், மீதியை மேடை நாடகமாகவும் இணைத்து வெற்றி கண்டிருக்கிறார் அகஸ்டோ.

– சித்தார்த்

இவர்களில் ஜானகி மட்டும்தான் அங்க ஹீனம்.

பைலட் மோட்டார் படகு ஒன்று வழி காட்ட, பயணம் துவங்கியது....

''என்னுடைய கனவு நனவாகி விட்டது. வெற்றிகரமாக எங்கள் குழு கரையைத் தொட மொத்தம் பதினொன்று மணி நேரம் பிடித்தது. கடுமையான குளிர்.... சுற்றிலும் பனிமூடியிருந்ததால் இருட்டு... பயங்கரமான அலைகள்... வீசியடிக்கும் காற்று.... கூட்டம் கூட்டமாய் ஜெல்லி மீன்கள்... ஆனால் என்னுடைய எண்ணம் பூராவும் ஒரேயொரு விஷயத்தில்தான் இருந்தது.

கரையைத் தொட வேண்டும்..... கரையைத் தொட வேண்டும்.... கரையைத் தொட வேண்டும்....

ஒரேயொரு பெரிய ஆபத்து வந்தது. நீந்திக் கொண்டே வந்த நான் ஒரு பெரிய அலை அப்படியே சுருட்டி இழுத்துப் போட, நேரே எங்களுடைய பைலட் மோட்டார்ப் படகின் அடியில் சென்று சிக்கிக் கொண்டேன். இருட்டில் மற்றவர்களுக்கு விஷயம் தெரியாது. எப்படியோ கடவுள் அருளால் காப்பாற்றப்பட்டேன் என்று வைத்துக் கொள்ளுங்களேன்'' - தலையைச் சிலிர்த்துக் கொண்டு சிரிக்கிறார் ஜானகி.

ஜானகியைக் கௌரவிக்கும் விதமாக 'Janaki Meantime Express' என்று அந்தப் போட்டிக்குப் பெயர் சூட்டியிருந்தார்களாம்.

''இந்தச் சாதனையைப் புரிய கடந்த நான்கு வருடங்களாக நான் எடுத்துக் கொண்ட சிரமங்களும் முயற்சிகளும் கொஞ்சநஞ்சமல்ல. இந்த நான்கு வருடங்களும் வெளி உலகில் என்ன நடந்தது என்பதே எனக்குத் தெரியாது'' - என்கிறார் ஜானகி.

சிண்டிகேட் வங்கியில் பணிபுரியும் முப்பத்தேழு வயதான ஜானகிக்கு, ''என்னென்ன மொழிகள் தெரியும்?''

''எனக்குத் தெரிந்ததெல்லாம் இரண்டே இரண்டு மொழிகள்தாம். ஒன்று தண்ணீர்.... இன்னொன்று நீச்சல்'' - மறுபடியும் சிரிப்பு.

கன்னடத்திலும் ஆங்கிலத்திலுமாக பேட்டி முடித்து கிளம்பும்போது வாசல் வரைக்கும் வீல்சேரிலேயே வந்து வழியனுப்பினார் ஜானகி. வாசலுக்கு வெளியேதான் நிறைய ஊனமுற்றவர்கள் இருக்கிறார்கள் என்பதுபோல் ஓர் எண்ணம் சட்டென்று தோன்றி மறைந்தது.

– அமுதவன்

அட்டை, மற்றும் கட்டுரைக்கான படங்கள் : ஆர்.எஸ். கிருஷ்ணமூர்த்தி.

# பகவானை நாடுவதற்கு சில நற்காரணங்கள்

பகவான் கட்பீஸ். உங்களின் ஷூட்டிங் சர்டிங் மற்றும், பல்வகை துணிகளுக்கும் நாடுவீர் பகவானை! கண்கவர் வண்ணங்கள். பரவசமூட்டும் துணி வகைகள். அனைத்திற்கும் பகவான்.

ஏஜெண்ட்களோ, இடைத் தரகர்களோ, இல்லாமல் விமல், ரேமாண்ட், குவாலியர் மற்றும் பெரிய மில்களில் இருந்து நேரடி. கொள்முதலால் உண்மையான விலை மலிவு. இவைபோக தள்ளுபடியும் கூட. ஆகையால் பகவான் உங்களின் நல்ல தேர்வு மட்டுமல்ல, சிக்கனமானதும் கூட.

உங்கள் வாழ்வின் வசந்த காலத்திற்கு எங்களின் நகைப் பிரிவில் சீரிய தங்க ஆபரணங்களின் அணிவரிசை. எங்களின் ஏதாவதொரு சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து ஒரு தங்க புதையலை உமதாக்குவீர்!.

துணிகளுக்கு

**10%**

தள்ளுபடியும் உண்டு.

ஞாயிறும் கடை உண்டு.

## ஸ்ரீ பகவான் கட் பீஸ் ஜங்ஷன்

21, பாண்டி பஜார், தி.நகர், சென்னை-17.
போன்: 445777, 443642.

123, வாலாஜா ரோடு, சென்னை-2,
போன்: 846966.

எங்களின் ஜுவெல்லரி ஷோரும்:

BTM நியூ ஸ்ரீ பகவான் தங்க மாளிகை
பி) லிட்.

63, பாண்டி பஜார், சென்னை - 17.
போன்: 445002, 445003.

National M/241

# அரங்கநாயகம் வருத்தப்பட்டிருப்பது எதற்காக?

● காலத்தின் கட்டாயம்!





● ராஜீவுடன் போயிருந்தால்...

● பேசியது உண்மை





● கட் அவுட் சட்டம்!

● தகுதியானவர்தானா?





● கருணாநிதிக்குத் தகுதியில்லை

● பொறுப்புள்ள எதிர்க்கட்சி...



● எம். இராஜேந்திரன், லால்குடி.

*? "ஜெயலலிதா காங்கிரசில் சேர்வார், இது காலத்தின் கட்டாயம்" என காங்கிரஸ் எம்.பி. அன்பரசு கூறியுள்ளாரே?*

! அத்தகைய காலத்தின் கட்டாயம் 'ஜெ'க்கு ஏற்படுகிறதோ இல்லையோ, இப்படிப் பேச வேண்டிய காலத்தின் கட்டாயம் அன்பரசுக்கு ஏற்பட்டிருக்கிறது.

● இரா. சம்பத்குமார், இராசிபுரம்.

*? "நான் மட்டும் ஸ்ரீபெரும்புதூர் கூட்டத்துக்குச் சென்றிருந்தால் ராஜீவைக் காப்பாற்றியிருப்பேன்; அல்லது அவருடன் சேர்ந்து நானும் மடிந்திருப்பேன்" என்று ப. சிதம்பரம் பேசியுள்ளது பற்றி...?*

! "ராஜீவுக்கு அந்தக் கோர மரணம் நிகழப் போவது ப.சிதம்பரத்துக்கு முன்பே தெரியும். அதனால்தான் அவர் ராஜீவுடன் போகவில்லை" என்று சொல்லப்படுவதுதான் அபத்தம் என்று எண்ணியிருந்தேன். ப. சிதம்பரத்தின் கூற்று அதை விட அபத்தமாயிருக்கிறது!

● டி. எஸ். திரவியம், தேனி.

*? மாதம் ஒரு நகரம் செல்வது சமுதாய நோக்கமா, அல்லது சர்க்குலேஷனை அதிகரிப்பதற்கா?*

! "மாதம் ஒரு மாவட்டம் என்று கல்கியில் பிரச்னைகளை ஆராய்ந்து பிரசுரித்தார்கள். இதெல்லாம் விற்பனையை அதிகரிக்கிற விஷயங்களே அல்ல. சமுதாய நோக்கோடு செய்கிறார்கள்" என்று கல்கி பொன் விழா மேடையில் சோ பேசியது உண்மை.

● கோவி. ராதாகிருஷ்ணன், அரக்கோணம்.

*? ஷோபா டே, நயன்தாராசைகல் - இவர்கள் நல்லின் சில் போட்டியில் குறிப்பிடப்பட்டவர்கள். அவர்களைப் பற்றி ஏதாவது ஒரு குறிப்பு கொடுக்கலாமே?*

! ஷோபா டே, "ஸ்டாரிநைட்ஸ்", "சிஸ்டர்ஸ்" முதலிய பரபரப்பூட்டும் கிளுகிளுப்பான நாவல்களை எழுதியவர். இவை திரைப்படங்களாகவும் தயாராகப் போகின்றனவாம். நயன்தாராசைகல் 80களில் அதிகாரவர்க்கத்தையும் ஆட்சியாளரையும் வைத்து எழுதிய நாவல்கள் அருமையானவை. பெருமை சேர்ப்பவை. இவர் விஜயலட்சுமி பண்டிட்டின் மகள்.

● எஸ். வில்சன், நாகர்கோயில்.

*? தமிழக ஜனதா தள கட்சித் தலைமைக்கு சிவாஜி கணேசன் தகுதியானவர்தானா?*

! தகுதியானவரோ என்னவோ; தாக்குப் பிடித்துக் கொண்டிருக்கிறாரே, அதுவே பெரிய காரியம்!

● நா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

*? "பொது வாழ்க்கைக்கு வந்த பிறகு, உயிருக்குப் பயந்தால் ஒன்றும் செய்ய முடியாது" என்கிறாரே, தமிழக முதல்வர் ஜெயலலிதா?*

! யாருக்கு இந்த உபதேசமோ, அவருடைய பாதுகாப்புக்குப் பூனைப் படை பட்

டாளம் கொடுத்தபின் அறிவுரை வழங்கி னால் ஏற்கலாம்!

● எம். சிவா, தேனி.

? "பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகக் காங்கிரஸ் செயல்படும்" என சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் பாலசுப்பிரமணியம் கூறுகிறாரே?

! பின்னே, "ஜெயலலிதா ரசிகர் மன்றமாகச் செயல்படுவோம்" என்றா சொல்ல முடியும்?

● பிரபா லிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்.

? "ஊழல் புகார் கொடுக்கக் கருணாநிதிக்குத் தகுதியில்லை" என நெடுஞ்செழியன் கூறுகிறாரே?

! அப்போ, தகுதியுள்ளவர் கொடுக்கிற அளவுக்கு ஊழல் உள்ளது என்பதை ஒப்புக் கொண்டவராகிறார்!

● பூங்குழலி, கெங்கவல்லி.

? "கட் அவுட் வைப்பதை எதிர்த்துச் சட்டம் போடத் தயார்" என்கிறாரே, முதல்வர் ஜெ.?

! அப்படி ஒரு சட்டம் வருமானால், அதிலும் விசேஷ அனுமதி பெற்றுச் சில சந்தர்ப்பங்களில் சிலர் வைத்துக் கொள்ள வசதி செய்யும் ஓட்டை இருக்கும்!

● நிவேதிதா, திருச்சி.

? "அகலிகையாக இருந்த காவலர்களுக்கு ராமராய் வந்த முதல்வர்" என்று அரசு உள்துறைச் செயலர் முதல்வரை வர்ணித்திருக்



● காரமான பேச்சு



● வருத்தியது ஏன்?

கிறாரே?

! பாவம், அவருக்கு அகலிகை கதை தெரியாது போலிருக்கிறது.

● நவவானதி, சென்னை - 114. ❑

? விற்பனை வரி விதிக்கப்படுவதன் நோக்கம் கம்பெனிகளின் லாபத்தில் அரசு ஒரு பங்கை எடுத்துக் கொள்வதுதான். ஆனால் இதைக் கம்பெனிகள் தாங்களே செலுத்தாமல் நுகர்வோர் மீது பகிரங்கமாகத் திணிப்பது என்ன நியாயம்?

! கம்பெனிகளின் உற்பத்தி மீது உற்பத்தி வரி விதிக்கப்படுகிறது. கம்பெனிகளின் லாபத்தின் மீது வருமான வரி விதிக்கப்படுகிறது. விற்பனை வரி என்பது பண்டம் வாங்குவோர் மீது விதிக்கப்படும் வரிதான். தவிர, கம்பெனிகளும் உற்பத்திக்குத் தேவையான பல்வேறு பண்டங்களை வாங்கும்போதெல்லாம் விற்பனை வரி செலுத்துகின்றன என்பதை மறந்து விடாதீர்கள்! விற்பனை வரி என்றதும் நினைவு வருகிறது : பெட்ரோலியப் பொருள்களின் விலை உயர்வை வாபஸ் பெறுமாறு மத்திய அரசைக் கோரும் ஜெயலலிதா, அவை மீது மாநில அரசு விதித்துள்ள கடுமையான விற்பனை வரியைக் கணிசமாகக் குறைக்கலாமே!

> ❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
> நவவானதி,
> 42 B, துரைராஜ் தெரு,
> பழவந்தாங்கல்,
> சென்னை - 600 114.

● பி. முகிலன், கோவை.

? "ஐ.ஏ.எஸ். அதிகாரி சந்திரலேகா மீது திராவகம் வீசப்பட்ட போது அப்போது கண்டிக்காமல் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் சங்கம் எங்கே போனது" என்று கருணாநிதி வினவுகிறாரே?

! காரமான பேச்சு என்றாலும் சாரம் இல்லாது போகவில்லை. பொதுவாகவே ஐ.ஏ.எஸ். அதிகாரிகள், அச்சமற்ற நிலையில் நிமிர்ந்து நின்று அறிவுரை சொன்ன பான்மை மாறி, ஆட்சியில் உள்ளோருக்கு வளைந்து கொடுக்கும் பாங்குதான் அதிகரித்து வருகிறது.

● ஹஜ்ப்ரியன், செங்குன்றம்.

? தான் கொடுத்த தகவல் தவறானது என்று வருத்தம் தெரிவித்திருக்கும் அரங்கநாயகம், வருத்தப்பட்டிருப்பது கலைஞருக்காகவா அல்லது ஐந்து லட்சம் நஷ்டஈடு தொகைக்காகவா?

! தமக்கு வந்து சேரக்கூடிய அவப் பெயருக்கு அஞ்சி.

● வீ. சோழன், செம்போடை.

? சமீபத்தில் நீங்கள் அதிர்ந்து போன சம்பவம்?

! தமிழக அரசுக்குச் சொந்தமான 74 நிறுவனங்களில் 42 நிறுவனங்களே 1990-91 ஆம் ஆண்டுக்கான கணக்குகளை முடித்துள்ளன! 32 நிறுவனங்களில் செலுத்தப்பட்ட மூலதனமான 96.78 கோடி ரூபாயைக் காட்டிலும் 1991ம் ஆண்டு வரையிலான கூட்டு நஷ்டம் 424 கோடி ரூபாயாக உள்ளது! இந்தக் கூட்டு நஷ்டத்தில் தமிழ்நாடு சிறு தொழில் நிறுவனம்; பல்லவன் போக்குவரத்துக் கழகம், தமிழ்நாடு நுகர்பொருள் வாணிபக் கழகம் ஆகிய மூன்று நிறுவனங்களின் பங்கு 60 விழுக்காடு (254.50 கோடி ரூபாய்) ஆகும். இது இந்தியக் கணக்காய்வுத் துறைத் தலைவரின் சமீபத்திய தணிக்கை அறிக்கை. அதிர்ந்து போகாமல் என்ன செய்ய?



வாழ்வின் பிரச்னைகளை இவள் இன்முகத்துடன் எதிர்த்துச் சமாளிக்கிறாள். அனுபவப் பிரச்னைகள் ஆயிரம். அத்துடன் அன்புச் செல்வங்களின் தேவைகள். இரண்டையும் மலர்ந்த முகத்துடன் எதிர்க்கும் மன உறுதி இவளுக்கு உண்டு. இத்தகைய பெண்களுக்காகவே ஓவர்சீஸ் சன்மார் வழங்குகிறது — ஸ்திரீ சக்தி.

இது இவளுடைய விசேஷத் தேவைகளையும் எண்ணங்களையும் நிறைவேற்ற உதவும் திட்டம்.

INTRODUCING
STREE
SHAKTHI
MORE POWER TO WOMEN.

இவள் பாடுபட்டுச் சேர்க்கும் பணம் விரைவில் பெருகி வளர்வதற்கென்றே வடிவமைக்கப்பட்டது.

ஸ்திரீ சக்தி — அளிப்பது ஓவர்சீஸ் சன்மார். ரூ.1000 கோடி சன்மார் குழுமத்தின் பக்க பலத்தைக் கொண்ட ஒரு நிதி நிறுவனம். 24,000-க்கு மேற்பட்ட டெபாசிட்தாரர்களின் நம்பிக்கையைப் பெற்ற ஒரு நிறுவனம்.

ஸ்திரீ சக்தி — சிறந்ததையே விரும்பும் பெண்மணிகளுக்கு.

## இப்பொழுது மாதந்தோறும் வட்டி பெறுங்கள் — 15%

## ஸ்திரீ சக்தி — ரொக்க சர்ட்டிபிகேட்

| திட்டம் | காலம் மாதங்களில் | தொடக்க டெபாசிட்* | முதிர்வடையும்போது வழங்கப்படக்கூடிய தொகை | விளைவான வருடாந்திர வருமானம்* |
|---|---|---|---|---|
| 1 | 60 | Rs. 950 | Rs.2000 | 22.11% |
| 2 | 48 | Rs.1102 | Rs.2000 | 20.37% |
| 3 | 36 | Rs.1280 | Rs.2000 | 18.75% |
| 4 | 25 | Rs.1466 | Rs.2000 | 17.48% |

*தொடக்க டெபாசிட்டுகள் [illegible] இருக்கும். அதிகப்படி டெபாசிட்டுகள் 60, 48, 36 மற்றும் 25 மாதங்களுக்கு முறையே ரூ.475/-, ரூ.551/-, ரூ.640/- மற்றும் ரூ.733/- ஆகிய தொகைகளின் மடங்குகளில் இருக்கும்.

## பிக்சட் டெபாசிட்

| காலம் மாதங்களில் | மாதாந்திர வட்டி* |
|---|---|
| 25, 36, 48, 60 | 15% |

*[illegible]

## குமுலேட்டிவ் டெபாசிட்

| காலம் மாதங்களில் | டெபாசிட் தொகை | முதிர்வடையும் போது வழங்கப்படுவது* | ஒவ்வொரு கூடுதல் ரூ.1,000/- தொகைக்கு | விளைவான வருடாந்திர வருமானம்* |
|---|---|---|---|---|
| 25 | Rs.2000 | Rs.2728 | Rs.1364 | 17.47% |
| 36 | Rs.2000 | Rs.3128 | Rs.1564 | 18.80% |
| 48 | Rs.2000 | Rs.3631 | Rs.1815 | 20.39% |
| 60 | Rs.2000 | Rs.4214 | Rs.2107 | 22.14% |

*மாதாந்திரக்கால அளவில் 15% கணக்கிடப்பட்ட வட்டி [illegible]

**FAA—**

**கிரைஸில் மூலம் உயர்ந்த பாதுகாப்பு**

இந்த மதிப்பீடு, வட்டி மற்றும் அசல் தொகையைக் குறித்த காலத்தில் வழங்குவது பற்றிய பாதுகாப்பின் அளவு, உறுதியாக இருப்பதைக் குறிக்கிறது.


இனி ஒரு சதி
கதை: பத்மா ரவிசங்கர்
11
படம்:
ஸ்டேஷனில் கார்த்திகேயன்...
ஆராமுது! காதல் என்னபாடு படுத்துது பார்த்தீங்களா? அர்ச்சனா அலிபை கொடுக்கறா.
யுவராஜ் அந்த நேரத்தில் தன்னோட இருந்ததாச் சொல்லி, காப்பாத்தப் பார்க்கிறா...
...ஆனா ஷீ தடம் யுவராஜை சுட்டிக்காட்டுது. அவன் ஓடினப்ப முதுகைப் பார்த்த விசுவத்தின் சாட்சிஇருக்கு. கெமிகல் ஷாப்புல விஷம் வாங்க முயற்சி பண்ணதா தகவல் கிடைச்சிருக்கு...
ஆனா மோடிவ் இல்லையே ஆராமுது? எதுக்காக அவன் சந்திரசேகரைக் கொல்லணும்? அவனோட பூர்விகத்தை ஆராய்ந்த ஸி.ஐ.டி., அவன் ரொம்ப சமத்துன்னு சர்டிஃபிகேட் தந்திருக்கே!
சார்! யுவராஜ் வந்தப்புறம் கம்பெனில லாபம் கொழிச்சிருக்கு. தன்னோட முயற்சியினால கம்பெனி முன்னேற, சொத்தையெல்லாம் வில்வத்துக்கு எழுதி வைச்சிருக்காரேங்கிற கோபத்துல.. உணர்ச்சி வசப்பட்டு...
உணர்ச்சி வசப்பட்டு சந்திர சேகரைத் தீர்த்துட்டா, சொத்தெல்லாம் உயில்படி வில்வத்துக்குப் போகும். இவனுக்கென்ன லாபம்?
குழம்புது ஸார்!


அப்போது ஃபோன் அலற மறுமுனையில்...
ஸார்! பெரிய அய்யாவின் பர்சனல் டயரி ஒன்று கிடைச்சிருக்கு! இதுல வில்வம் ஐயா பற்றிக்கூட ஏதோ விவகாரமா எழுதியிருக்கார்...
சந்திரசேகர் வீட்டின் மற்றொரு அறை எக்ஸ்டென்ஷனில், வில்வம் உரையாடலை ஒட்டுக் கேட்க...
குட்! குட்! டயரியை இருந்த இடத்திலேயே வைச்சுடு. இப்ப அவசர கேஸ்ல இருக்கேன். நாளைக் காலைல வர்றேன்.
அன்றிரவு.. சந்தடி அடங்கிய நேரத்தில் வில்வம், சந்திர சேகரின் அறையில் அலமாரியை அலசி...
நல்ல காலம்; டயரி கிடைச்சுடுத்து; கொளுத்திடலாம்.
சட்டென்று விளக்குகள் எரிய..
தேவையில்லை வில்வம்! அது வெத்து டயரி. உன்னை மடக்க நான் செய்த செட் அப்! யூ ஆர் அண்டர் அரெஸ்ட்!
வில்வம் திகைப்பு நீங்கிச் சமாளித்து...
இன்ஸ்பெக்டர், என்மேலே நீங்க கை வைக்கவே முடியாது! என்ன சாட்சியம்? என்ன மோடிவ் இருக்கு, நான் மாமாவைக் கொல்ல? எப்படி செய்திருக்க முடியும்?
சொல்றேன்!



கார்த்திகேயன் மர்ம முடிச்சுக் களை அவிழ்த்தார்...
'ஊருக்குப் போனவர் திரும்பட்டும்; ஏற்பாடு செய்துடறேன்'னு சந்திரசேகர் விருந்தன்னிக்குச் சொன்னதா, அர்ச்சனா குறிப்பிட்டாள், இல்லையா? அதுதான் `கீ'!
ஊருக்குப் போயிருந்த விக்ரமைத்தான் குறிப்பிட்டார்னு வைச்சுக்கிட்டா... `யுவராஜுக்கு ஒரு சர்ப்ரைஸ் பரிசு'ன்னு அவர் சொன்னது, உயிலாகத்தான் இருக்கணும்! சின்ஸியரா உழைச்சு, நிறுவனம் முன்னேறக் காரணமான யுவராஜுக்கு உயிலை மாற்றி எழுத நினைச்சிருக்கார்!
அதை மோப்பம் பிடிச்ச வில்வம், அப்படி ஏதும் நடப்பதற்கு முன்னால் மாமாவைத் தீர்த்துக் கட்ட நினைச்சிருக்கான். அப்ப, ஏற்கெனவே எழுதிய உயில்படி இவனுக்கே எல்லாம் வந்து சேரும்!
உங்க ஊகம் சரின்னே வைச்சுக்கிட்டாலும், எப்படி ஸார் அத்தனைபேர் எதிரே சூப்புல இவன் விஷம் கலந்திருக்க முடியும்?
இவன் கலக்கவே யில்லை! சந்திரசேகர் தானே கலந்துக்கும் படி செய்துட்டான்!
ஆ!
பெரியசாமி! சமையலறைல மொத்தம் எத்தனை மிளகு-உப்பு குப்பிகள் இருந்துச்சு; இப்ப எவ்வளவு இருக்குன்னு சின்னதா ஒரு கணக்கு...?
இதோ பார்த்துச் சொல்றேன், ஸார்!
தொடரும்


பாரம்பரியத்தின்
விநோத படைப்பு
Sharda
SAREES
பட்டு
பாலியெஸ்டர்
சேலைகள்
மற்றும்
பாவாடைகள்.
எல்லா பிரபல
ஜவுளி கடைகளிலும் கிடைக்கும்
CHARI



● மாணவர் தலைவர்கள்

# தேர்தலில் தோற்ற அமைச்சரின் மகள்!

அரசியல் கட்சித் தேர்தல்களை விட அமர்க்களமாக நடந்தது தில்லி பல்கலைக் கழகத் தேர்தல்கள்! அதே வன்முறை, அதே பஸ் உடைப்பு, சுற்றுப்புறத்திற்கு அதே அளவு சீர்குலைவு, அதே பணவிரயம்! பங்கு பெற்றவர்களும் அரசியல்வாதிகளோடு சம்பந்தம் பெற்றவர்கள்! பிரசிடெண்ட் தேர்வுக்கு நாஷனல் ஸ்டூடண்ட்ஸ் யூனியன் சார்பில் போட்டியிட்டவர் சுமித்ரா தேவ். மத்திய மந்திரி சந்தோஷ் மோகன் தேவின் மகள். இவர் தேர்தலில் தோற்று விட்டாலும், தனது அரசியல் தொடர்பால் வேண்டிய அளவு பரபரப்பை ஏற்படுத்தினார். முடிவில் பி.ஜே.பி.யின் தொடர்பு கொண்ட ஏ.பி.வி.பி. அணி முக்கிய மூன்று பதவிகளான பிரசிடெண்ட், செக்ரடரி, ஜாயிண்ட் செக்ரடரி ஆகியவற்றை வென்றது. காங்கிரஸ் தொடர்பு கொண்ட என்.எஸ்.யு. அணி ஒரே ஒரு பதவியை வென்றது.

## பள்ளிகளில் மரங்கள் :

விமானப் படையில் ஆபீஸராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற சரத் சதுர்வேதி தமது ஓய்வு நேரத்தை ஒரு புது வழியில் செலவிடுகிறார். இவரும் இவரது குழுவினரும் பள்ளிகளுக்குப் பழங்கள் தரும் மரங்கள் வளர்க்க வசதியாக விதைகளைக் கொடுக்கின்றார்கள். இதற்காக, தில்லியின் பல ஐந்து நட்சத்திர ஓட்டல்களுக்கும் சென்று, அவர்கள் உபயோகிக்கும் பப்பாளி, மா, ஆரஞ்சு, எலுமிச்சை போன்றவற்றின் விதைகளைச் சேகரிக்கிறார்கள். இவற்றைத் தங்கள் பண்ணையிலேயே பயிரிட்டு வேண்டுபவர்களுக்கு நாற்றாகக் கொடுக்கிறார்கள். தில்லியில் 15 பள்ளிகளில் இவர்கள் அளித்த நாற்றுகள் மரங்களாகியுள்ளன.

## பிரதமருக்கு விதிக்கப்பட்ட தடை!

கடந்த மூன்று மாதங்களாகப் பிரதமர் நரசிம்ம ராவ் தமது சொந்த அலுவலக அறைக்குள்ளேயே நுழைய முடியாதபடி தடை செய்யப்பட்டிருக்கிறார்...! அவரது அலுவலகத்தில் ஒரு புது 'லிஃப்ட்' நிறுவுவதற்காகப் பல வெளியாட்கள் வந்து வேலை செய்கிறார்கள். எனவே பாதுகாப்புக் காரணங்கள் கருதி இத் தடை!

## ஓடும் பஸ்ஸிலிருந்து விழுந்து...

தில்லியில், ஓடும் பஸ்ஸிலிருந்து விழுந்து உயிர் இழப்பவர்களின் எண்ணிக்கை இரு மடங்காக உயர்ந்துள்ளது. அரசு ஓட்டும் தில்லி டிரான்ஸ்போர்ட் பஸ்கள் போதாமல், இங்கு 2730 தனியார் பஸ்களும் ஓடுகின்றன. இப்போது அரசு எல்லா தனியார் பஸ்களிலும் தானே இயங்கி மூடிக் கொள்ளும் கதவுகளைப் (Pneumatic doors) பொருத்த வேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறது. 'தில்லி டிரான்ஸ்போர்ட் பஸ்களில் கதவுகளே இல்லாத போது, எங்களை மட்டும் சிறப்புக் கதவுகள் போடச் சொல்வது என்ன நியாயம்?' என்று போர்க் கொடி தூக்கியுள்ளனர் தனியார் பஸ் நிறுவன முதலாளிகள்!

– ராஜீவி நரசிம்மன்

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன், ஆசிரியர் : கி. ராஜேந்திரன், இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka